ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:







# கம்பனின் சமயம்

( முதல் பாகம் )

( ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடு )

ஆசிரியர்.

ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,

அட்வகேட்,

'ஆசிரியர்' ஸ்ரீவைஷ்ணவஸுதர்சனம்,

3. புத்தூர் அக்ரஹாரம், திருச்சிராப்பள்ளி-1.



விலை ரூ. 1-00.   தபாற்கூலி 20 பைசா.

ஸ்ரீநிவாஸம் பிரஸ், 8-புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:





# கம்பனின் சமயம்

(முதல் பாகம்)

(ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடு)

ஆசிரியர்.

ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்,

'ஆசிரியர்' ஸ்ரீவைஷ்ணவஸுதர்சனம்.

3. புத்தூர் அக்ரஹாரம்.

திருச்சிராப்பள்ளி-1.



17—3—65

(குரோதி - பங்குனிஉத்தரம்)

விலை ரூ. 1-00. தபாற்கூலி 20 பைசா.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# முகவுரை



தமிழ்ப்புலவர்களில் சிலர் பல வருடங்களாகக் கம்பனின் சமயம் வைணவமே என்னும் பேருண்மையை மறைக்க முயன்று வருகின்றனர். வெள்ளிடை மலைபோல் விளங்கும் இவ்வுண்மையை நிலைநாட்டும் நூல் ஒன்று எழுதவேண்டும் என்னும் அவா நீண்டகாலமாக எந்தையார்க்கும் அடியேனுக்கும் உண்டு. அதற்குச் சந்தர்ப்பம் ஒன்று சில வருடங்களுக்கு முன் வாய்த்தது. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தார் வெளியிட்டுவரும் கம்பராமாயணப்பதிப்பினுடைய பதிப்பாசியர் குழுவின் தலைவராய் விளங்கும் திரு. G. சுப்பிரமணியப்பிள்ளை M. A. B. L. அவர்கள் கழகப்பதிப்பின் திருவவதாரப்படலத்தில் பல திருத்தங்களைச் செய்து, 7—7—61 வானொலி இதழில் "கம்பராமாயணத்தில் பாடபேதங்கள்" என்னும் கட்டுரையிலும், தருமை ஆதீனத்தாரால் வெளியிடப்பட்டுவரும் "ஞானசம்பந்தம்" என்னும் பத்திரிகையின் பிலவ ஆவணி (10—9—61) இதழில் வெளிவந்த கட்டுரையிலும் கம்பனின் உண்மைச் சமயத்தைத் திரித்துக் கூறியிருந்தார்.

பிள்ளையவர்களின் கட்டுரைகளிலுள்ள கருத்துக்கள் தவறு என்று நிரூபித்து, கம்பனின் உண்மைச்சமயத்தைக் காட்டித்தரும் "கம்பனின் சமயம்" என்னும் நூல் பிலவ பங்குனி உத்திரத்தன்று (21—3—62) நம்மால் தொடங்கப் பெற்றது. நம்முடைய பத்திரிகையான "ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்" மாத இதழில் மாதந்தோறும் சிறிதுசிறிதாக வெளியிடப்பட்டுவந்தது. தொடங்கிச் சில மாதங்கள் வரை வெளிவந்தபகுதி பிள்ளையவர்களுக்கும் அனுப்பப்பட்டது. அவர்களிடமிருந்து யாதொரு பதிலுமில்லை. கழகப்பதிப்பின் ஆரணியகாண்டம் முற்பகுதி வரையிலுமே இப்போது தொடர்ச்சியாக வெளிவந்திருக்கிறபடியால் அது வரையி

லுள்ள பகுதியின் ஆராய்ச்சி இன்று (குரோதி பங்குனி உத்திரத்தன்று) முதல் பாகமாக வெளியிடப்படுகிறது. கழகப்பதிப்பின் எஞ்சிய பகுதிகள் முழுவதும் வெளி வந்த பின் இந்நூலின் பிற்பகுதிகள் வெளியிடப்படும்.

மற்ற துறைகளிற்போலே. இலக்கியத்துறையிலும். மதத்துறையிலும் இப்போது நேர்மை மிகவும் குறைந்து விட்டது தங்கள் கருத்தைப் பழங்காவியங்களின் மீது தமிழ்ப்புலவர்கள் ஏறிடுகிறார்கள். இதை எடுத்துக் காட்டினாலும் தவறை ஒப்புக்கொள்ள மனமிருப்பதில்லை. பத்திரிகைகளும் உண்மையை வெளிப்படுத்தும் இத்தகைய நூல்களுக்கு மதிப்புரையெழுதத் தயங்குகின்றன. இது நாட்டுக்கு நல்லதல்ல. பிள்ளையவர்கள் நம் கருத்துக்கு மாறுபடுவாரானால். தம் கருத்தை நிலைநாட்டி எழுத வேண்டும். இல்லாவிடில் முன்னம் தாம் எழுதியது தவறு என்று ஒப்புக்கொள்ளவேண்டும். இதுவே நேர்மையும் பெருந்தன்மையுமாகும். மௌனமாயிருப்பது புலவர்களுக்கு அழகல்ல. பத்திரிகைகளும். மற்ற தமிழ்ப்புலவர்களும் இத்தகைய நூல்களை நடுநிலைநின்று ஆராய்ந்து மதிப்புரை களை எழுதவேண்டும். இதனால் நாடு நலம் பெறும். தங்களுக்குக் கசப்பாயிருக்கின்ற காரணத்தால் உண்மைகளை மறைக்கப்புகுவது நாட்டுக்குத் தீங்கையே விளைக்கும். தமிழ் நாட்டில் தீங்குகள் ஒடுங்கி நலங்கள் ஓங்க ஆதி பரம்பொருள் அருளுவானாக.

ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M. A. B. L.,
'ஸ்ரீவைஷ்ணவஸுதர்சனம்' ஆசிரியர்.

குரோதி. 3, புத்தூர் அக்ரஹாரம்.
பங்குனி உத்தரம். திருச்சிராப்பள்ளி-1.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்

ஸம்புடம்-15] [ஸஞ்சிகை-4

# கம்பனின் சமயம்

[அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தாரால் வெளியிடப்பெற்ற கம்பராமாயணப் பதிப்பைப்பற்றியதொரு ஆராய்ச்சி.]

## முன்னுரை.

கம்பன் தன் இராமாவதாரக்கதையை ஸ்ரீரங்கத்தில் அரங்கேற்றிய பங்குனி உத்திரத்திருநாளன்று (21—3—62) இவ்வாராய்ச்சிக் கட்டுரை தொடங்கப்படுகிறது. கம்பன் பங்குனி உத்திரத்திருநாளன்று ஸ்ரீரங்கத்தில் தன் இராம காதையை அரங்கேற்றம் செய்தான் என்றும், அதை ஸ்ரீரங்கத்தில் அக்காலத்திலிருந்த வைஷ்ணவப் பெரியார்கள் அங்கீகரித்தனர் என்றும், மேட்டழகியசிங்கரும் இரணியன் வதைப் படலத்தைக் கேட்டு ஆமோதித்தார் என்றும் நீண்டநாட்களாக ஐதிஹ்யங்கள் வழங்கிவரு கின்றன. இவற்றினின்றும், கம்பன் நாராயணனின் அவ தாரமான ராமனின் கதையை வால்மீகி ராமாயணத்தை முதனூலாகக்கொண்டு காவியம் பாடியிருப்பதிலிருந்தும் கம்பனுடைய சமயம் வைணவமே என்பதை எவரும் உணர லாம். எச்சமயத்துக்கும் பொதுவாகப் பேசும் வள்ளுவரை யும் திருவள்ளுவ நாயனுராக்கிக்கொண்ட சைவவுலகமும், 'கம்பநாட்டாழ்வார்' என்றே கம்பரை அழைப்பதிலிருந்தும் இவ்வுண்மை புலனுகும். இருந்தபோதிலும் இவற்றை மாத்திரம்கொண்டு கம்பனுடைய சமயத்தை அறுதியிடமுடி யாது. கம்பராமாயணம் முழுவதையும் நடுநிலைநின்று நோக்கியபின்பே கம்பனுடைய சமயத்தைப்பற்றி நாம் ஒரு

முடிவுக்கு வரமுடியும். அப்படி ஆராய்ந்தாலும் கம்பனின் சமயம் வைணவமே என்பது ஐயம்திரிபற விளங்கும் என்று நிலைநாட்டுவது இக்கட்டுரையின் முக்கிய நோக்கமாகும்.

**கம்பராமாயணமும் சைவர்களும்.**

கம்பன் வைணவமதத்தைச் சேர்ந்தவனே என்பதும், கம்பராமாயணத்தில் வைஷ்ணவ விசிஷ்டாத்வைத மதக்கொள்கைகள் எங்கும் விரவிக்கிடக்கின்றன என்பதும் நடுநிலைநின்று ஆராய்வோருக்குப் புலனாகும். அப்படியிருந்தும் இக்காவியத்தை வைணவப்பெருமக்கள் அநாதரவு செய்துவிட்டனர். ஆழ்வார்களுடைய அருளிச்செயல்களையும், அவற்றின் உரைகளையும் ரஹஸ்ய வேதாந்தநூல்களையும் கற்பதிலேயே போதுபோக்கிவந்த அவர்களுக்குக் கம்பராமாயணத்தைப் போற்றிப் பாதுகாக்க அவகாசமில்லை. கம்பராமாயணம் பெரும்பாலும் சைவமடங்களிலும், சைவத்தமிழ்வித்துவான்களாலுமே பாதுகாத்து வளர்க்கப்பட்டு வந்தது. வெள்ளியம்பலத்தம்பிரான் என்னும் சைவத்தம்பிரான் ஒருவர் பல பாடல்களைப் புனைந்து கம்பராமாயணத்தில் சேர்த்துவிட்டார் என்பதும், அவை வெள்ளிப்பாடல்கள் என வழங்கப்படுகின்றன என்பதும் பிரசித்தம். வைணவர்களில் எவரும் இப்படிப் பாடல்களைச் சேர்த்தார் என்பதற்கு ஆதாரமேயில்லை. இதனாலேயே ஒருசில இடங்களில் கம்பராமாயணத்தில் வைணவக்கொள்கைக்கு மாறாகத் தோன்றும் சில பாடல்கள் இடம்பெற்றுள்ளன. அப்பாடல்களையும் கம்பனுடைய மதக்கொள்கைக்கு விரோதமில்லாதபடி பொருள்கொள்ளலாம் என்று கம்பராமாயணம் முழுவதற்கும் உரையெழுதிய ஸ்ரீ உ. வே. வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார்ஸ்வாமி, எந்தையாரான ஸ்ரீ உ. வே. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார்ஸ்வாமி (ஸுதர்சனம் ஸ்தாபகர்) முதலான பெரியோர்கள் காட்டியிருக்கிறார்கள். பல ஆயிரம் பாடல்களில் கம்பன் தன் சமயக்கருத்தைத் தெளிவாகக் காட்டியிருக்கையால், அதற்கிசையவே முரண்பாடுள்ளது

போல் தோன்றும் அந்த ஒரு சில பாடல்களுக்குப் பொருள் கொள்ளவேண்டும் என்பது நடுநிலையாளர்கள் இசையக் கூடியதேயாகும்.

இப்படியிருக்கும்போது தற்காலத்தில் சில சைவ வித்வான்கள் கம்பன் மும்மூர்த்திகளும் ஒன்று என்றோ, சமமானவர் என்றோ கூறும் சமரசவாதி என்று கூறிவந்தனர். பல்லாயிரக்கணக்கான பாடல்கள் இக்கூற்றுக்கு முரணாயிருப்பதைக்கண்டு, திரு டி. கே. சிதம்பரநாதமுதலியார் என்னும் சைவர் பல்லாயிரக்கணக்கான பாடல்களைக் கம்பன் பாடியவையே அல்ல என்று கழித்துவிட்டார். பற்பல பாடல்களின் பாடங்களை மனம்போனவாறு மாற்றிவிட்டார். "விழுமியது சொற்றனை" [ஆரணியகாண்டம்-அகத்தியப்படலம்] என்று தொடங்கும் பாடலுக்குக் 'கல்கி' பத்திரிகையில் பொருள் எழுதிவரும்போது அதிலுள்ள 'முழுமுதல்வன்' என்னும் தொடருக்கு சிவன் என்று பொருள் எழுதினர். இது கம்பனுடைய மற்ற பாடல்களுக்குப் பொருந்தாது என்பதையும் 'முழுமுதல்வன்' என்னும் தொடருக்கு விஷ்ணு என்றே பொருள் என்பதையும் நிலைநாட்டி 'கல்கி' பத்திரிகைக்கு ஓர் கடிதம் எழுதியிருந்தோம். அது 'கல்கி' பத்திரிகையிலும் பிரசுரிக்கப்பட்டது. அதைக்கண்டபின்பும் டி. கே. சி தம் பொருளை மாற்றிக் கொள்ளவுமில்லை; அதை நிலைநிறுத்த முயலவுமில்லை. இதிலிருந்து இவர் சைவப்பற்றுள்ளவர் என்பதும், அப்பற்றினுல் கம்பராமாயணத்தின் பாடல்களையும், பொருளையும் மாற்றக் கூடியவர் என்பதும் நடுநிலையாளர்க்கு விளங்கும். இவர், தம் மனப்போக்கையே கொண்டு கம்பன்பாடல்களில் ஏராளமானவற்றைத் தள்ளிவிட்டாராகையால் கம்பராமாயண ஆராய்ச்சியாளர் பலரும் இவருடைய செயலை ஏற்கவில்லை.

சில வருஷங்களாக அண்ணுமலைப் பல்கலைக்கழகத்தார் கம்பராமாயணத்திற்குத் திருந்திய பதிப்பொன்றைப் பதிப்பிக்க முயன்று சில பாகங்களையும் வெளியிட்டுள்ளார்கள். அதில் பாலகாண்டம் முதற்பகுதியில் சைவாபிமானமுள்ள

திரு. G. சுப்பிரமணியபிள்ளை M. A. B. L. (தமிழாராய்ச்சித் துறைத் தலைவர்) அவர்கள் செய்திருக்கும் பல திருத்தங்கள் நடுநிலையாளர்களால் ஒப்புக்கொள்ளப்படமாட்டா என்று நிரூபிப்பதும் இக்கட்டுரையின் நோக்கங்களில் ஒன்றாகும். இப்பதிப்பின் முகவுரையிலும், பதிப்புரையிலும் இப்பேராசிரியர் அரசியற்படலத்திற்கும் திருவவதாரப்படலத்திற்கும் உரையெழுதியிருப்பதாகவும், பதிப்புப்பணியைச் சிறந்தமுறையில் கண்காணித்து உதவியதாகவும் காண்கிறது. இதிலிருந்து திருவவதாரப்படலத்திலுள்ள பாடமாற்றங்களுக்கு இவரே பொறுப்பு என்று விளங்கும். திருவவதாரப்படலம் கம்பன் தன் சமயக்கருத்தைத் தெளிவுறக் காட்டும் படலங்களில் ஒன்றாகும். இப்படலத்தின் பதிப்புப் பொறுப்பை சைவாபிமானம் உள்ளஒருவரிடம் பதிப்புக்குழு அளித்துவிட்டது மிகவும் வருந்தத்தக்கது. இவர் திருவவதாரப்படலத்தின் பழைய பதிப்புகள் எல்லாவற்றிலும் உள்ள பற்பல பாடங்களை மாற்றிவிட்டார். 7—7—61 வானொலி இதழில் "கம்பராமாயணத்தில் பாடபேதங்கள்" என்னும் தலைப்பில் அச்சிடப்பெற்றிருக்கும் ஓர்கட்டுரையில் தம் சைவாபிமானம் தோற்றும்படியான பல வாக்கியங்களை எழுதியிருக்கிறார். இக்கட்டுரை தருமை ஆதீனத்தாரால் வெளியிடப்படும் "ஞானசம்பந்தம்" என்னும் சைவப்பத்திரிகை (பிலவ ஆவணி 10-9-61) இதழிலும் வெளியிடப்பட்டுள்ளது. பல பாடல்களை மாற்றியதற்குச் சில காரணங்களை இக்கட்டுரையில் காட்டியிருக்கிறார். அக்காரணங்கள் பொருந்தமாட்டா என்பதை இக்கட்டுரையில் நிரூபிப்போம்.

ஞானசம்பந்தத்தில் வெளிவந்த கட்டுரையில், "இனி, வேண்டுமென்றே மாற்றிய பாடவேறுபாடுகளை நோக்குவோம்"* என்று தொடங்கி, வைஷ்ணவர்கள் வேண்டு

---

* இத்தொடக்க வாக்கியம் மாத்திரம் வானொலிக் கட்டுரையில் இல்லை. மற்ற வாக்கியங்கள் வானொலிக் கட்டுரையிலும் அப்படியே உள்ளன.

மென்றே திருவவதாரப்படலத்தில் பல பாடல்களை மாற்றி விட்டார்கள் என்றும், அவையே பெரும்பாலான ஓலைச் சுவடிகளிலும், அச்சுப்புத்தகங்களிலும் ஏறிவிட்டன என்றும், இப்பதிப்புகள் எல்லாம் நம்பத்தகாதவையென்றும், தமக்குக் கிடைத்திருக்கும் இரண்டே சுவடிகளே நம்பத் தக்கவையென்றும், அவற்றில் இப்பாடங்கள் மாறியிருக் கின்றன என்றும் கூறுகின்றார் அந்த இரண்டு சுவடிகள் மாத்திரம் ஏன் நம்பத்தகுந்தவையென்பதற்கும், மற்ற சுவடி கள் ஏன் நம்பத்தகாதவை என்பதற்கும் சரியான காரணங் காட்டவில்லை பிள்ளையவர்கள். இப்படி இவர் கருதுவதற்கு இவருடைய சைவாபிமானம் தவிர வேறு காரணம் இல்லை என்பதை இனி நிரூபிப்போம்.

''பாலகாண்டம் திருவவதாரப் படலத்திற்கண்ட ஒரு வேறு பாடு முக்கியமானது. அரக்கர் கொடுமைக்கு ஆற்ருத அமரர்கள் முதலில் சிவனிடம் சென்று முறையிட்டனர் என்பதைக் குறித்த பாடல் வருமாறு:

'சுடுதொழிலரக்கராற் றெலைந்து வானுளோர்
கடுவமர் களனடி கலந்து கூறு(றலு?)ம்
படுபொருள் உணர்ந்த அப்பரமன் யாமினி
அடுவதில்லென மறுத் தவரொடேகினன்''

இப்பாடல் பல ஏட்டுச்சுவடிகளிலும் அச்சுப்புஸ்தகங்களிலும் இவ் வாறே காணப்படுகிறது. தேவர்கள் முதலில் சிவனிடம் சென்று முறையிடுதற்குரிய காரணத்தை 'கடுவமர் களன்' என்ற சொற் களால் கம்பன் நன்கு புலப்படுத்துகிருன். திருமால், பிரமன், இந்திரன் முதலிய எல்லாத்தேவர்களும் தோற்ருேடும்படி உலகையே வாரி விழுங்கிய ஆலகால நஞ்சினைச் சிவன் வாரிவிழுங்கித் தேவர் களையும் யாவரையும் காத்தருளினன் அல்லவா? அந்த ஆற்றலையும் முதன்மையையும் எண்ணி நன்றியறிதலோடு தேவர்கள் சிவன் திருவடியை வணங்கி முறையிட்டார்களாம். 'படுபொருள் உணர்ந் தவப் பரமன்' என்று சிவனைக் கம்பன் சிறப்பிக்கிருன். ஆனல் ஈற்றடி 'அடுவதில் என மறுத்து அவரொடேகினன்' என்றிருக்கிறது. எங்கே ஏகினன் என்று இடத்தைச்சுட்டாமல் வெறுமனே ஏகினன் என்று கம்பன் பாடுவானு? ஏகின இடத்தை அடுத்த பாடல்

நிகழ்ச்சிகொண்டு குறிப்பிற் பொருளுணரவைப்பது முறையா? அடுத்த பாடலில் சிவன் சென்று பிரமன் காலில் விழுந்து முறையிட்டான் என்று வந்துள்ளது. அவரோடேகிய சிவன் மட்டும் தான் பிரமன் காலில் விழுந்தானு? அவர் என்ற தேவர்கள் என்ன ஆனுர்கள்? அவர்கள் பிரமன் காலில் விழவில்லையா? ......ஆனல் இரண்டு பழைமையான நல்ல நம்பத்தக்க ஏடுகளில் ஈற்றடி வேறு பாடம் கொண்டு நிகழ்கிறது. ''அடுகிலம் மாயனுடைறைதிர் என்னவே'' என்பதுவே பாடம். திருமாலினிடம் சென்று கூறுங்கள் என்று மேல் நடக்கவிருப்பவற்றையறிந்த சிவன் கூறினுன் என்பது மிகப்பொருந்துவதாகும்''

என்று தொடங்கிப் பிள்ளையவர்கள் சில வாக்கியங்களை எழுதியிருக்கிருர்கள். இவ்வாதங்களை ஆராய்வோமினி.

ஆலகாலவிஷம் கிளம்பியபோது திருமால், பிரமன் முதலான எல்லாதேவர்களும் தோற்று ஓடியதாக எழுதுகிருர் பிள்ளை. இது இவருடைய கருத்தேயொழியக் கம்பனின் கருத்தல்ல. பாலகாண்டம் அகலிகைப் படலத்தில்

''வெருவுமாலமும் பிறையும் வெள் விடையவற் கீந்து
தருவும் வேறுள தகைமையும் சதமகற்கருளி
மருவுதொல்பெரு வளங்களும் வேறுற வழங்கித்
திருவுமாரமும் அணிந்தனன் சீதர மூர்த்தி''

என்று திருமாலே சிவனுக்குரிய பங்காக ஆலகாலவிஷத்தையும் சந்திரனையும் கொடுத்ததாகக் கம்பன் பாடுகிருனேயொழிய, பிள்ளை கனவு காண்பதுபோல் திருமால் ஆலகால விஷத்தைக்கண்டு ஓடியதாகக் கம்பன் பாடவில்லை. அண்ணமலைப் பல்கலைக் கழகப்பதிப்பிலும் இப்பாடல் இப்படியே காண்கிறது. [பிள்ளையவர்களின் பொறுப்பில் இப்படலத்தை விடாமையால் இப்பாடல் பிழைத்ததுபோலும்!] இதிலிருந்து தம் கருத்துக்குத் தக்கவாறு கம்பனின் பாடலை மாற்றக்கூடியவரே பிள்ளையவர்கள் என்று விளங்குகிறது. சிவன் எல்லாதெய்வங்களைக் காட்டிலும் மேலானவனுகையாலே, அவன் எந்த தெய்வத்தின் காலிலும் விழமாட்டான்

என்னும் தம் கருத்தைக் கம்பன் மேல் ஏற்றிடுவதற்காகவே திருவவதாரப்படலத்தில் பலபாடல்களை மாற்றிவிட்டார் பிள்ளை. திருமாலே சிவன் முதலான எல்லாத்தேவர்களையும் படைத்தளித்து அழிப்பவன் என்பதையும், சிவன் பலமுறை திருமால் காலில் விழுந்திருக்கிறான் என்பதையும் கம்பன் தன் காவியத்தில் பலவிடங்களில் காட்டியிருக்கிறான். உதாஹரணத்திற்கு இங்கு ஓரிடம் காட்டுவோம். பாலகாண்டம் அகலிகைப்படலத்திலேயே தேவர்கள் அமுதம் கடைவதற்காகத் திருமாலைச் சரணடைவதைக் குறிப்பிடும்போது,

"வெய்ய மாமுனி வெகுளியால் விண்ணக முதலாம்
வைய மியாவையும் வறுமைநோய் நலிதர வானோர்
தையல் பாகனுஞ் சதுமுகக் கடவுளுங் கூடிச்
செய்ய தாமரைத் திருவுறு மார்பனைச் சேர்ந்தார்"
[தையல் பாகன்—சிவன்.]

"வெஞ் சொன் மாமுனி வெகுளியால்
விளைந்தமை விளம்பிக்
கஞ்சநாண்மலர்க் கிழவனுங்
கடவுளர் பிறரும்
தஞ்சமில்லை நின் சரணமே
சரணெனச் சலியா(து)
அஞ்ச லஞ்ச லென் றுரைத்தனன்
உலகெலா மளந்தோன்"

என்று சிவனும் பிரமனும் சேர்ந்து திருமாலிடம் சென்று சரணடைந்தனர் என்று மிகத் தெளிவாகப் பாடியிருக்கிறான் கம்பன். அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பதிப்பிலும் "தேவர்கள் திருமாலைச் சரணடைதல்" என்னும் தலைப்புடன் இப்பாடல்கள் அச்சிடப்பெற்றுள்ளன. "சிவனையும் தேவர்களோடு இழுத்துச் செல்லக்கருதியே பின்வந்தோர்" திருவவதாரப்படலத்தில் பல மாற்றங்களைச் செய்துவிட்டனர் என்று எழுதும் பிள்ளையவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிப்பிலேயே அகலிகைப் படலத்தில் சிவனும் தேவர்

களோடு இழுத்துச் செல்லப்பட்டிருப்பதையும், திருமாலைச் சரணடையும்படி செய்யப்பட்டிருப்பதையும் காணத் தவறிவிட்டார்போலும்! இனி, பிள்ளையவர்கள், "பதிப்புக் குழுவார் திருவவதாரப்படலத்தின் பதிப்பை என்னிடம் கொடுத்தார்களேயொழிய, அகலிகைப்படலத்தின் பதிப்பை என்னிடம் கொடுக்கவில்லையே. அதனால்தான் இப் பாடல்கள் இப்படியே அச்சிடப்பட்டுவிட்டன. அப்படலத்தின் பதிப்பையும் என்னிடம் ஒப்படைத்திருந்தார்களாகில், சுவடிகளைக் கண்டுபிடித்து இப்பாடல்களையும் மாற்றியிருப்பேன்" என்றுதான் பதில் கூறமுடியும். ஆக, அகலிகைப் படலத்தில் உள்ளதுபோலவே திருவவதாரப் படலத்திலும் சிவனும் மற்றதேவர்களோடு சென்று திருமாலின் திருவடியில் வீழ்ந்தான் என்று பெரும்பாலான பதிப்புகளில் காணும் பாடங்களே உண்மையென்பதும், இதைப்பொருத சிலசைவர்கள் பாடங்களைமாற்றி இரண்டு சுவடிகளை எழுதிவிட்டார்கள் என்பதும், பிள்ளை தம் சைவாபிமானத்தாலே அச்சுவடிகளைக்கொண்டு உண்மைப் பாடல்களை மாற்றிவிட்டார் என்பதும் நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும்.

"'அவரொடேகினன்' என்றிருக்கிறது; எங்கே ஏகினன் என்று இடத்தைச் சுட்டாமல் வெறுமனே ஏகினன் என்று கம்பன் பாடுவானா? ஏகின இடத்தை அடுத்த பாடல் நிகழ்ச்சிகொண்டு குறிப்பிற் பொருளுணரவைப்பது முறையா?" என்று கேட்கிறார் பிள்ளையவர்கள். எத்தனையோ பாடல்களில் அடுத்த பாடலில் ஏகினவிடத்தை உணர்த்தியிருப்பதைப் பிள்ளை மறந்தார்போலும்! உதாரணமாக வேள்விப்படலத்திலே "சிற்பதமொப்பதோர் மெய்க்கொடு சென்றான்" என்று பாடலை முடித்து, அடுத்த பாடலில் சென்றவிடத்தைக் குறிப்பால் உணரவைக்கவில்லையா? அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பதிப்பிலும் இப்படியேயிருக்கிறதே! ஆகையால், இக்கேள்விகள் பயனற்றவை.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்

ஸம்புடம்-15] [ஸஞ்சிகை-5

# கம்பனின் சமயம்

''அடுத்த பாடலில் சிவன் சென்று பிரமனின் காலில் விழுந்து முறையிட்டான் என்று வந்துள்ளது; அவரோடேகிய சிவன் மட்டும்தான் பிரமன் காலில் விழுந்தானு? அவர் என்ற தேவர்கள் என்ன ஆனுர்கள்? அவர்கள் பிரமன் காலில் விழவில்லையா?'' என்று கேள்விகளைத் தொடுக்கிருர் பிள்ளை. தலைமைதாங்கிச் சென்ற சிவன் பிரமன் காலில் விழுந்ததைக் கூறினுல் மற்றவர்களும் விழுந்ததைக் கூறியதேயாகும் என்பதைப் பிள்ளை தம் அபிமானத்தாலே மறந்தாரே! மேலும், அப்பாடலில் பல பிரதிகளில் ''நான்முகக் கடவுளை அடிதொழுது அமரர்கண்டகர் இடிநிகர் வினையமது இயம்பினுர் அரோ'' என்னும் பாடம் காண்கிறது. இப்பாடத்தில் பிள்ளையின் கேள்விகள் ஏறமாட்டா. இதை விட்டு, படலத்தில் பற்பல பாடல்களையும் மாற்றியுள்ள இரண்டு சுவடிகளைப் பின்பற்றுவதற்கு சைவாபிமானம்தவிர வேறு காரணமில்லை. வேண்டுமென்றே பலபாடல்களை மாற்றியிருக்கும் இரண்டு சுவடிகளைத் தான் பின்பற்றிக் கொண்டு, பல்நூறு பிரதிகளிலுள்ளபாடங்களை வைஷ்ணவர்கள் மாற்றிய பாடங்கள் என்று பிள்ளை எழுதுவதை நடுநிலையாளர்கள் ஏற்கமாட்டார்கள். 'எழுந்தனர் கறைமிடற்றிறையும்'' ''மதிவளர் சடைமுடி மழுவலாள்னும்'' ''சுடர்மதி சூடினேனும்'' ''புராரிமற்றியானே வாதசேயெனப் புகன்ருன்'' என்று பல நூறு ஏட்டுப்பிரதிகளிலும் அச்சுப்பிரதிகளிலும் காணும் பாடங்களிலிருந்து சிவன் தேவர்களோடு வந்தான் என்று தெளிவாக விளங்குகிறது. இரண்டு சுவடிகளைக்கொண்டு இவ்வளவையும் மாற்றுவது முறையாகாது.

"திருமாலின் முன்னர் தேவர்கள் தாம் பிறக்கப்போகும் முறையைக் கூறவந்த இடத்து வாயு அனுமனைப் பிறப்பேன் என்ருன். பிறப்பேயில்லாத சிவனையும் திருமால் முன் கொண்டு நிறுத்திய பாடபேதக்காரர்களுக்குச் சிவனை என்ன செய்வது என்று தெரியவில்லை. ஆனால் அவனைச் சும்மா விடலாமா? அவனையும் வாயுபுகுந்த அனுமனுக்குள்ளேயே வைத்து அமுக்கி விட்டார்கள். அச்சுப்புத்தகங்களில் அப்பாடல் வருமாறு:

வாயுமற்றெனது கூறு மாருதியெனலு மற்ருேர்
காயுமர்க் கடங்களாகிக் காசினி யதனின்மீது
போயிடத் துணிந்தோ மென்ருர் புராரி மற்றி யானேவாத
சேயெனப் புகன்ருன் மற்றைத் திசையுளோர்க் கவதியுண்டோ.

## ஒருவனுக்குள்ளே இருவர்.

ஒருவனுககுள்ளே இருவர் புகுந்தார் என்பது எங்குமில்லாத ஆச்சரியம் அல்லவா? இதனல் கம்பன் பாடத்துக்குள்ளே ஒரு கொம்பனும் புகுந்திருக்கிருன் என்பது தெரியவரும்....மேலும், அஞ்சிலே ஒன்று பெற்ருனுகிய அனுமனை வாதசேய், காற்றின் மைந்தன் என்று கூறுவதுபோல், சிவன்சேய் என்ருே சிவன் அம்சம் என்ருே நூலில் வேறு எங்கும் கூறப்படவில்லை. இதிலிருந்தே மேலே குறித்த மாற்றங்கள் இடைச்செருகல் என்பது நன்கு தெரியவரும். வான்மிகத்திலும் இதற்கு எந்தவிதமான ஆதாரமும் கிடையாது. அங்கு ஏகாதசருத்திரர்களைக் குறித்துள்ளாரே தவிர, சிவன் திருமாலிடம் சென்றதாகவாவது, குறையிரு(ர?)ந்ததாக வாவது யாதொரு குறிப்பும் கிடையாது. அண்ணுமலைப் பல்கலைக் கழகம் வெளியிட்ட இராமாவதாரப்பதிப்பில்தான் இவ்வுண்மைகள் முதன்முதலாகக் கண்டு உலகிற்கு வெளியிடப்பட்டன. இவைபோல் ஆயிரக்கணக்கான திருந்திய நல்ல உண்மையான கம்பன் பாடல்கள் இன்னும் நமக்குக் கிடைக்கவிருக்கின்றன"

என்று எழுதுகிருர் பிள்ளை. இவற்றை ஆராய்வோமினி.

"பிறப்பேயில்லாத சிவன்" என்கிருர் பிள்ளை. இக்கூற்று பிள்ளையின் சைவாபிமானத்தைக் காட்டுகிறதேயொழிய, அவருடைய கம்பராமாயணப்புலமையைக் காட்டவில்லை. 'பிறப்பேயில்லாத சிவன்' என்று கம்பன் எங்கேயாவது தன் காவியத்தில் பாடியிருப்பதாகப் பிள்ளையவர்கள் எடுத்துக் காட்டுவாராகில், நாம் தோல்வியுற்ருேம் என்று வெளிப் படையாக அறிவித்துக்கொள்ளத்தட்டில்லை. இதைக் காட் டாதவரையில் பிள்ளையவர்களின் தோல்வியும் தவிர்க்கமுடி யாததாகும். 'சிவனும் நாராயணனல் படைக்கப்பட்ட ஓர்

சிவனே என்பதை வேதம், இதிஹாஸம், புராணம் முதலான வற்றிலிருந்து ஆயிரக்கணக்கான வாக்கியங்களை எடுத்துக் காட்டி "விஷ்ணுசித்தவிஜயம்" என்னும் நூலில் நாம் நிலை நாட்டியிருக்கிறோம். "நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும் தான்முகமாய்ச் சங்கரனைத் தான் படைத்தான்" என்னும் ஆழ்வார்களுடைய கொள்கையை அடியொற்றியவனே கம்பன் என்று இக்கட்டுரையிலும் கடைசியில் காட்டப்போகிறோம். முடியுமானால் சிவன் பிறப்பற்றவன் என்பதைக் கம்பராமாயணத்திலிருந்து பிள்ளை நிலை நாட்டட்டும்.

இனி, அனுமன் சிவனுடைய அம்சாவதாரமே என்பதே கம்பனுடைய கொள்கை என்பதை கம்பன் காவியத்திலிருந்தே காட்டுவோம்.

உயுத்தகாண்டம் முதற்போர்ப்படலத்தில் ராவணன் தேரின் மேலிருந்தும், ஸ்ரீராமபிரான் வெறுந்தரையில் நின்றும் போர்புரிவதைக் கண்ட அனுமன், அதைப் பொறுக்காமல் வெகுவேகமாக ராமனிருக்குமிடம் ஓடிவந்தான் என்று சொல்லிவிட்டு, அடுத்தபடியாக,

"பண்டை நாள்தரு பனித்திரைப் புனல் சடையேற்றுக்
கொண்ட தூயவன் கொடுந்தொழில் நிருதர்கள் குழுமி
மண்டு வாளமர்க் களத்திலம் மலர்க்கழல் சேரல்
கண்டு கூசலன் நிற்குமென் றுலது கடனே"

[முன்னொருநாள் எம்பெருமான் பாதத்திலிருந்து பெருகிய குளிர்ந்த அலைகளையுடைய கங்கையாகிற ஸ்ரீபாததீர்த்தத்தைச் சடையிலே ஏற்றுக்கொண்டு பரிசுத்தனான அச்சிவபிரான், கொடுந்தொழிலையுடைய அரக்கர்கள் ஒன்று கூடிச் சண்டைசெய்யும் போர்க்களத்திலே, அத்திருவடித் தாமரைகள் சேர்ந்து நிற்பதைக்கண்டு பொறுக்காமலிருந்தான் என்றால், அது (அவன்) கடமையல்லவா] என்னும் பாட்டிலே அனுமன் சிவனுடைய அவதாரம் என்று தெளிவாகக் காட்டினார் கல்வியிற் பெரியரான கம்பர். கிட்கிந்தா காண்டத்தில் நட்புக்கோட்படலத்தில் "சங்குசக்கரக்குறியுள...இராமன் அத்திருநெடுமாலே இங்குதித்தனன்" என்

றும், "பேராடகத்தனிவில் இறுக்கும் தன்மை அம்மாயவற் கன்றியும் எளிதோ" என்றும் இராமன் திருமாலே என்று அனுமன் சுக்கிரீவனுக்கு உணர்த்திவிட்டு,

"என்னையீன்றவன் இவ்வுலகியாவையுமீன்றான்
தன்னையீன்றவற்கு அடிமைசெய் தவமஃதையா
உன்னையீன்றவற்கு உறுபதமுளதென உரைத்தான்
இன்னதோன்றலே அவன் இதற்கு ஏதுவுண்(டு)இறையோய்"

என்று கூறியதாக ஒரு பாடல் உள்ளது. "(சிவனாகிய) என்னைப் பெற்றவனாய், உலகு எல்லாவற்றையும் படைத்தவனை பிரமனையும் படைத்த நாராயணனுக்கு அடிமை செய். ஐயனே! அதுவே தவம். உன்னைப்பிறப்பித்தவனை சூரியனுக்கும் சூரியபதமுண்டாகும்படி சங்கற்பித்தவன் இவ்விராமனே. அரசனே! நான் இப்படிச் சொல்லுவதற்குக் காரணமுண்டு" என்னும் பொருளையுடைய இப்பாடலிலும் அனுமன் வாயிலாகவே கம்பன் சிவனே அனுமனாகப் பிறந்ததை வலியுறுத்துகிறான். கிட்கிந்தாகாண்டம் அனுமப்படலத்தில் "இல்லாத உலகத்தெங்கும்" என்று தொடங்கும் பாடலில் இராமன் அனுமனின் சொல்லாற்றலை வியந்து கூறும்போது, "விரிஞ்சனோ" என்று ஐயமுற்று, அவ்வையம் நீங்கப்பெற்று, 'விடைவல்லானோ' என்று மேலொருவரைச் சொல்லாமல் பாடலை முடித்திருப்பதும் கம்பனின் கருத்தை விளக்கும். "ஆலமுண்டவனின் நின்று அருநடம் புரிகுவான்" [கிட்கி-நட்பு (2)] முதலான மற்றும் சிலபாடல்களிலும் கம்பன் இக்கருத்தைக் குறிப்பால் உணர்த்தியிருப்பதும் உண்டு. இவற்றிலிருந்து, "அஞ்சிலே ஒன்று பெற்றானாகிய அனுமனை வாதசேய், காற்றின்மைந்தன் என்று கூறுவது போல், சிவன் சேய் என்றோ, சிவன் அம்சம் என்றோ, சிவன் கூறு என்றோ நூலில் வேறு எங்கும் கூறப்படவில்லை" என்று பிள்ளை எழுதியது தவறென விளங்கும். 'அனுமன் சிவன் சேய்' என்பது கம்பன் கருத்தல்லவாகையால் கம்பன் அப்படி எங்கும் கூறவில்லை. சிவனே அனுமனாகப்பிறந்தவன் என்னும் தன் கருத்தைக் கம்பன் காட்டியிருப்பதைக் காட்டினோம். ஆகையால் இவ்விஷயத்திலும் பிள்ளையின் வாதங்கள் பயனற்றொழிந்தன.

# கம்பனின் சமயம்

இனி, "இரண்டு பாடல்களில் அனுமன் சிவனின் அம்சம் என்று தெளிவாகவும், சில பாடல்களில் குறிப்பாகவும் உணர்த்தியிருப்பது போதுமா? அவ்விரண்டு பாடல்களையும் இடைச்செருகல் என்று சொல்லிவிடுகிறேன்" என்று பிள்ளை கூறக்கூடும். மேலும் இரண்டு பாடல்களில் அனுமன் சிவனின் அம்சமே என்று கம்பன் காட்டியிருப்பதைக் காட்டுவோம். உயுத்தகாண்டம் இலங்கைகாண் படலத்தில், மாலியவான் இராவணனுக்கு வானரசேனையில் உள்ளவர்களின் பெருமையைச் சொல்லிவரும்போது,

"வாலி மாமகன் வந்தானை வானவர்க்கிறைவனென்றார்
நீலனை உலகமுண்ணும் நெருப்பினுக்கரசனென்றார்
காலனை ஒக்கும் தூதன் காலும் கண்ணுதலும் என்றார்
மேலும் ஒன்றுரைத்தார் அன்னான் விரிஞ்சனும் இனிமேல் என்றார்"

[வாலியின் பிள்ளையான அங்கதனைப் பிறந்தவன் தேவேந்திரன் என்று கூறுகிறார்கள்; நீலனைப் பிறந்தவன் உலகத்தை எரிக்கும் நெருப்பின் தேவனான அக்னியென்று கூறுகிறார்கள். காலனை ஒத்த தூதனாகிய அனுமன் காற்றின் தேவனும், நெற்றிக்கண்ணனான சிவனுமாவான் என்று கூறுகிறார்கள். அவ்வனுமனே மேல்வரும் கற்பத்தில் ப்ரஹ்மதேவனாகப் போகிறான் என்றும் கூறுகிறார்கள்.] என்று கூறுவதிலிருந்து அனுமன் சிவனுடைய அம்சமுமாவான் என்று தெளிவாக விளங்குகிறது. மாலியவானுடைய கூற்றுகளுக்கு பதிலுரைக்கும் இராவணன்,

"சூலமேய் தடக்கையண்ணல் தானும் ஓர் குரங்காய்த்தோன்றின்
ஏலுமேல் இடைவதல்லால் என்செய்வன் என்னைக் கால
வேலையே கடைந்த மேனாள் உலகெலாம் வெருவ வந்த
ஆலமோ விழுங்க என் கை அயில்முகப் பகழியம்மா"

[சூலமேந்திய பெருங்கைய்யுடைய என் ஸ்வாமியான சிவன் தானே ஒரு குரங்காய் தோன்றி என்னோடு எதிரிட்டா

716



ருயினும் என்னிடம் தோற்பதொழிய என்னை என்ன செய்ய முடியும்? கடலைக்கடைந்த முன்னாளிலே உலகமெல்லாம் பயப்படும்படியாக வந்த ஆலகாலவிஷத்தைப்போலே, என் கையிலிருந்து புறப்படும் கூர்முனை அம்பையும் அவனால் விழுங்கிவிடமுடியுமோ?] என்று கூறியிருப்பதும் அநுமன் சிவனின் அம்சம் என்பதே கம்பனின் கருத்து என்பதை வலியுறுத்துகிறது.

இனி, இப்பாடல்களும் இடைச்செருகல்களே என்று கூறப்போகிறார் பிள்ளையவர்கள். இப்படித்தள்ளிக்கொண்டும் பாடங்களைத் திருத்திக்கொண்டுமிருந்தால் கடைசியில் அது G. சுப்பிரமணியப்பிள்ளை ராமாயணமாக முடியுமேயொழியக் கம்பராமாயணமாயிருக்காது. இந்த இராமாயணத்தைக் கம்பராமாயணமாக நடுநிலையாளர்கள் ஏற்கமாட்டார்கள்.

அநுமன் சிவனுடைய அம்சம் என்பது புராணங்களில் பலவிடங்களில் கூறப்பட்டுள்ளது. திருப்பதி ஸ்தலமாஹாத்மியத்தில் காணலாம். வால்மீகிராமாயணத்தில் பல பதிப்புகளில் இவ்விஷயம் இல்லை. கம்பன் பலவிடங்களில் வால்மீகியினின்றும் வேறுபட்டுப் பேசியிருக்கையாலே. இது ஒரு குறையுமில்லை. வால்மீகிராமாயணத்திலும், கல்பாத்திப் பதிப்பில்,

"மாருதஸ்யாத்மஜ: ஸ்ரீமாந் ஹநுமாந் நாம வாநர: ।
ஸர்வவாநரமுக்₂யேஷு பு₃த்₃தி₄மாந் ப₃லவாநபி ॥
வஜ்ரஸம்ஹநநோபேதோ வைநதேயஸமோ ஜவே ।
ருத்₃ரஸ்ய புத்ரோ ப₃லவாந் ஹரிஸ் ஸூர்யாநந: ப்ரபே₄:॥"

[கைங்கரியச் செல்வம் பெற்றவனான ஹனுமான் என்னும் வானரன் வாயுவின்பிள்ளை; வாநரச்ரேஷ்டர்கள் அனைவரிலும் புத்திமானாகவும் பலவானாகவும் விளங்குபவன்; வஜ்ரத்தைப் போன்ற சரீர அமைப்பை உடையவன்; வேகத்தில் கருடனுக்கு ஒப்பாயிருப்பவன். ஸூர்யனைப்போன்ற முகமுடையவனாய், பலவானான அவ்வானரன் பிரபுவான உருத்திரனுடைய புத்திரன்] என்று காணப்படுகிறது. அப்பதிப்பில்

கடைசி அர்த்தத்துக்கு" ருத்ரனுடைய புத்ரன் ஸூர்யானனன் என்னும் வானரன்" என்று பொருள் உரைக்கப்பட்டது. ஸூர்யானனன் என்னும் வானரன் ஒருவன் இருந்ததாக இராமாயணத்தில் இல்லையாதலால் இப்பொருள் சரியன்று. அனுமனையே பொருளாகக்கொண்டு நாம்காட்டிய பொருளே சரியானது. கம்பருக்கு இவ்வர்த்தம் கிடைத்தமையாலும் அவர் அனுமனைச் சிவனுடைய அம்சமாகப் பாடியிருக்கலாம். கம்பருக்கு ஏறக்குறைய சமகாலத்தில் இருந்த திவ்யகவி பிள்ளைப் பெருமாளையங்காரும் தம் பரப்ரஹ்மவிவேகத்தில்,

"அந்த அரனே அனுமானு கப்பிறந்து
சந்ததமும் வாகனமாய்த் தாங்கியதை—இந்தவுல
கெல்லா மறிய மால் ஏறுனு னென்பதென்னே
கல்லா மட மாந்தர் காள்"

[கல்வியில்லாத மூட மனிதர்களே! அந்தச்சிவனே ஹனுமானாகப் பிறந்து (பகவானை) எப்போதும் வாகனமாய்த் தாங்கியதை இவ்வுலகிலுள்ளார் அனைவரும் அறிந்திருக்க, பகவான் (சிவனை) எருதாகித் தாங்கினான் என்று சொல்லுவதால் பயனென்ன?] என்று பாடியிருப்பதிலிருந்தும் கம்பர் காலத்தில் இவ்விஷயம் பிரஸித்தமாயிருந்தது என்று விளங்குகிறது. "இந்தவுலகெல்லாமறிய" என்கையாலே இது ஸுப்ரஸித்தம் என்று விளங்குகிறது. பிற்காலத்தில், இளையாற்றங்குடி நம்பி இயற்றிய இராமஜயத்திருப்புகழிலும், சைவரான அருணகிரிநாதர் தம் திருப்புகழிலும் இவ்விஷயத்தை ஏற்றுப்பாடியிருக்கின்றனர் என்பர் பெரியோர்கள். இப்படிப் பெருவழக்குள்ள விஷயத்தைக் கம்பரும் ஏற்றுப் பாடினர் என்று கொள்ளுவதில் குறையொன்றுமில்லை என்பது நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும்.

"ஒருவனுக்குள்ளே இருவர் புகுந்தார் என்பது எங்குமில்லாத ஆச்சரியமல்லவா? இதனால் கம்பன் பாடத்துக்குள்ளே ஒரு கொம்பனும் புகுந்திருக்கிறான் என்பது தெரியவரும்" என்று எழுதுகிறார் பிள்ளை. ஒருவனுக்குள்ளே இருவர் மாத்திரமல்லாமல் மூவர் புகுந்து விட்டதாகப் பிள்ளையே

எழுதியிருக்கும் பேராச்சரியந்தைக் காட்டுவோமினி. ''மேலும், இராமனைத் திருமாலின் அவதாரம் என்று கொள்ளாமல், 'சூலமும் திகிரிசங்கும் கரகமும் துறந்து தொல்லை ஆலமும் மலரும் வெள்ளிப்பொருப்பும் விட்டு அயோத்தி வந்தான்' என்று மூவரின் அவதாரமே என்று பொங்கிப் புகழ்கிறான்'' என்று வாமெலிக்கட்டுரையிலேயே இராமனுக்குள் மூவர் புகுந்துகொண்டிருப்பதாக எழுதும்போது பிள்ளை தாம் சற்றுமுன் 'ஒருவனுக்குள்ளே இருவர் புகுந்தார் என்பது எங்குமில்லாத ஆச்சரியமல்லவா' என்று எழுதியதை மறந்தார்போலும்! 'புராரி மற்றியானே வாதசெய்' என்னும் பாடத்திலே கம்பனுக்குள்ளே ஒரு கொம்பன் புகுந்திருப்பது உண்மையானால், 'சூலமும் திகிரி சங்கும்' என்னும் பாட்டிலும் அக்கொம்பன் புகுந்திருக்கவேண்டுமே! இதைப்பிள்ளை இசைகின்றாரா என்பது தெரியவேண்டும்.

உண்மையில், இருவர் சேர்ந்து ஒருவராக அவதரிப்பதில் பொருந்தாமையொன்றுமில்லை. ஆத்மா நுண்ணியதாகையாலும், தேவர்கள் சக்திமிக்கவர்களாகையாலும், அனுமனின் ஆத்மாவினுள் வாயுவும், உருத்திரனுமாகிய இரண்டு தேவர்களும் புகுந்து தங்கள் சக்தி முதலானவற்றைக் கொடுத்திருக்கலாம்.

''அடையார் கமலத்து அலர்மகள் கேள்வன் கையாழியென்னும்
படையோடு நாந்தகமும் படர்தண்டும் ஒண்சார்ங்கவில்லும்
புடையார் புரிசங்கமும் இந்தப் பூதலம் காப்பதற்கென்று
இடையே இராமாநுசமுனியாயின இந்நிலத்தே'' [33]

என்னும் இராமநுசநூற்றந்தாதிப் பாசுரத்தில் இராமாநுசரை பஞ்சாயுதங்களாகிற ஐந்து நித்யஸூரிகளின் அவதாரமாகக் குறிப்பிட்டிருப்பதும் உணரத்தக்கது. இருவருடைய அம்சம் ஒருவருக்குக் கூடாதென்றே கொண்டாலும், வாயுவும் அஞ்சனையும் கூடியதால் உண்டான அனுமன் வாயுபுத்திரனேயென்றும், உருத்திரன் ஒருவனுடைய அம்சமுடையவனேயென்றும் கொண்டுவிடலாம். ஆகையால் பிள்ளையின் வாதங்கள் பயனற்றவையேயாயின.

## கம்பனின் சமயம்



"இங்கே சிவன் தேவர்களோடு பிரமனிடத்தும் திருமாலிடத்தும் சென்ருனு? இல்லையா? என்பது கேள்வி. 'அடுகிலம் மாயுனெடு அறைதிர் என்னவே' என்பது ஒருபாடம். இவற்றுக்கேற்பப் பின்னுள்ள இருபது பாடல்களில் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. இவற்றுள் எது உண்மையான பாடம்? கம்பன் எவ்வாறு பாடியிருப்பான்? என்பதை நாம் கூர்ந்து ஆராயவேண்டும். இரண்டு ஏடுகளில் மட்டுமே சிவன் ஏகவில்லை என்று காணப்படுகிறது. மற்ற எல்லா ஏடுகளிலும் சிவன் ஏகினுன் என்றே உள்ளது. இத்தகைய இடங்களில் நாம் காய்தல் உவத்தல் இன்றி உண்மையைக் காணவேண்டும்." என்று எழுதுகிருர் பிள்ளை.

### ஒரு ஏடு கைவிட்டது!

இக்கூற்றைக் காய்தல் உவத்தல் இல்லாமல் ஆராயும் நடுநிலையாளர்க்கு இரண்டு சுவடிகளில் மட்டுமே காணும் பாடம் வேண்டுமென்றே மாற்றப்பட்டதென்றும், மற்ற எல்லா ஏடுகளிலேயும் உள்ள பாடமே கம்பன் பாடியதென்றும் விளங்கும். இக்கட்டுரையில் நாம் காட்டிவரும் காரணங்களும் இவ்வுண்மையை ஐயம் திரிபற விளக்கும். முக்கியமான ஒரு சான்றை இனிகாட்டுவோம். "இரண்டு ஏடுகளில் மட்டுமே சிவன் ஏகவில்லை என்று காணப்படுகிறது" என்று பிள்ளை எழுதியதும் முழுஉண்மையல்ல என்பதையும். இரண்டு ஏடுகளில் ஒரு ஏடும் ஓரிடத்தில் பிள்ளையைக் கைவிட்டது என்பதையும் கழகப்பதிப்பைக் கொண்டே காட்டுவோம் இனி.

இருபது பாடல்களுக்குமேல் மாற்றங்கள் செய்யப்பட்டுள்ள அவ்விரண்டு ஏடுகளுக்கும் கழகப்பதிப்பில் 12, 27 என்று இலக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளது. மாற்றம் செய்யப்பட்ட பாடல்களில் (பழையபதிப்புக்களிலுள்ளபடி)

"எழுந்தனர் கறைமிடற்றிறையும் தாமரைச்
செழுந்தவிசுவந்தவத்தேவும் சென்றெதிர்

விழுந்தன ரடிமிசை விண்ணுளோரொடும்
தொழுந்தொறும் தொழுந்தொறும் களி துலங்குவார்''

என்பது ஒரு பாடல். இதில் 'கறைமிடற்றிறை' என்று கழுத்தில் விஷக்கறையைக்கொண்ட சிவனை எடுத்து, அவன் திருமாலின் திருவடியில் விழுந்ததாகப் பாடியிருக்கிறார் கம்பர். இதைப் பொருத சைவர் ஒருவர் 12-என்னும் இலக்கமிட்ட சுவடியில் 'கறைமிடற்றிறை' என்பதை 'விண்ணவர்க்கிறை' எனத்திருத்திவிட்டார். மற்ற எல்லாப்பாடல்களிலும் 12-வது இலக்கமிட்ட சுவடியிற்போலவே திருத்தம் பல செய்துவந்த 27-வது இலக்கமிட்ட சுவடிக்காரர் இவ்விடத்தில் தம்மையும் மறந்து "கறைமிடற்றிறையும்" என்னும் உண்மைப் பாடத்தையே எழுதிவைத்துவிட்டார். என்னே! தெய்வச்செயல்! இதிலிருந்து "இரண்டு சுவடிகளில் மட்டுமே சிவன் ஏகவில்லை என்று காணப்படுகிறது" என்று பிள்ளை எழுதியதும் முழு உண்மையல்ல என்பதும் இரண்டு சுவடிகளில் ஒரு சுவடி சிவனையும் ஏகச்செய்தும் திருமாலின் காலில் சிவனை விழச் செய்தும் பிள்ளையைக் கைவிட்டுவிட்டது என்பதும் விளங்குகிறது. இவையெல்லாம் கழகப்பதிப்பில் பாடவேறுபாடு என்னும் தலைப்பில் 93-ம்பக்கத்தில் 193-ம்பாடலின் பாட வேறுபாடுகளை ஆராய்வாருக்கு எளிதில் புலனாகும். திருவவதாரப்படலத்திற்கு உரையெழுதியவரும், பாடங்களைச் சுவடிகளிலிருந்து தேர்ந்தெடுத்தவரும், பதிப்புப்பணியைச் 'சிறந்தமுறையில் கண்காணித்து' உதவியவருமான பிள்ளை தம்மை இப்படி ஒரு சுவடி கைவிட்டுவிட்டதை அறியாமலிருக்க நியாயமில்லை. அப்படியிருக்க, ஒரு சுவடியில் இப்படி வேறுபாடிருப்பதை வானொலிக் கட்டுரையில் காட்டாததோடன்றியில் இரண்டு ஏட்டிலும்சிவன் ஏகவில்லையென்றே பாடங்கள் உள்ளதாக எழுதியிருப்பது நேர்மையைக் காட்டவில்லை.

## இரண்டாவது ஏடும் கைவிட்டது!

ஆக, சிவன் திருமாலின் திருவடியில் விழுந்ததாகத் திருவவதாரப் படலத்தின் எல்லா ஏடுகளிலும் காணப்படு

கிறதென்றும், 12-என்னும் இலக்கமிட்ட ஒரு ஏட்டில் மாத்திரம் இவ்வுண்மை மாற்றப்பட்டிருக்கிறதென்றும் விளங்குகிறது. இப்பன்னிரண்டாவது ஏட்டிலும் அகலிகைப்படலத்திலே * "வெய்யமாமுனி" * "வெஞ்சொன் மாமுனி" என்று தொடங்கும் பாடல்களிலே சிவனும் திருமாலிடம் சென்றதாகவும், திருமாலைச் சரணடைந்ததாகவும் பாடமுள்ளது என்பது கழகப்பதிப்பில், பாடவேறுபாடு என்னும் தலைப்பில் 208-ம் பக்கத்தில் உள்ள 496, 497 பாடல்களின் பாடவேறுபாடுகளை ஆராய்வாருக்கு எளிதில் புலனாகும். ஆக, பிள்ளை தமக்கு ஆதாரமாக எடுத்திருக்கும் இரண்டு சுவடிகளுமே, சிவன் திருமாலிடத்துச் சென்று அவரைச்சரணடைந்தான் என்று ஒவ்வோரிடத்தில் கூறுவதன்மூலம் பிள்ளையைக் கைவிட்டுவிட்டன. என்னே பரிதாபம்!

சிவன் அனுமானாகப் பிறந்தானா இல்லையா என்பது சிறியவிஷயம். இதில் கம்பன் கருத்து எப்படியானாலும் கம்பனின் சமயம் வைணவமே என்று முடிவுகட்ட ஒரு தடையுமில்லை. வைணவர்களில் சிலரும் சிவன் அனுமனாகப் பிறந்ததாக இசைய மறுப்பதுண்டு. உதாஹரணமாக, வால்மீகி ராமாயணத்திற்கு வியாக்கியானம் செய்த பரமவைஷ்ணவரான கோவிந்தராஜர், பாலகாண்டம் பதினேழாவது ஸர்க்கம் பதினாறுவது ச்லோகவ்யாக்யானத்தில், "ருத்₃ரோ ப்₃ரஹ்மஞோ நியுக்தோऽபி ரக்ஷ:பக்ஷபாதித்வாத் ந கஞ்சந ஸ்ருஷ்டவாந்" [உருத்திரன் பிரமனால் கட்டளையிடப்பட்டபோதிலும் (இராவணன் முதலிய) அரக்கர்களிடம் பக்ஷபாதத்தாலே ஒரு வானரனையும் (தன் அம்சமாக) ஸ்ருஷ்டிக்கவில்லை.] என்று எழுதிவைத்தார். வைஷ்ணவர்கள் அனைவரும் அனுமனுக்குச் சிறந்த கௌரவம் கொடுத்து ஆலயங்களிலும் பிரதிஷ்டை செய்து அவனை வணங்குகிறார்கள். அனுமனுக்கு ருத்ராம்ச

* இவ்விருபாடல்களையும் கழகப் பதிப்பிலுள்ளபடி நாம் இக்கட்டுரையில் ஏழாம்பக்கத்தில் கொடுத்திருக்கிறோம்.

யில்லை என்று ஸ்தாபிப்பதாலோ, கம்பன் அநுமனை ருத்ராம்சமாகக் கருதவில்லை என்று ஸ்தாபிக்கப் பாடங்களை மாற்றுவதாலோ வைஷ்ணவர்களுக்கோ, கம்பனின் சமயக் கொள்கைக்கோ எவ்வித ஊறும் ஏற்படாது. ஆனல், பிள்ளையைப்போன்ற சைவர்கள் ஒரு முக்கியமான பெரிய விஷயத்தைக் குறிக்கொள்ளவேண்டும். அதாவது,—சிவன் முதலான தேவர்கள் ஜீவர்களே என்பதையும், நாராயணன் ஒருவனே சிவன் முதலானரை உள்ளிட்ட அனைத்துலகையும் படைத்தளித்தழிக்கும் முழுமுதல்வன் என்பதையும் கம்பன் ஆயிரக்கணக்கான இடங்களில் காட்டியிருக்கிருன் என்பதும், இதை எவராலும் அசைக்கமுடியாது என்பதுமே யாகும். இனி, இதை விரிவாக விளக்க முற்படுவோம்.

"கம்பனுடைய கருத்தையும் போக்கையும் நாம் காவியம் முழுதிலும் தொடர்ந்து சென்று காணும்போது, எந்தச் சமயத்தையும் எந்தக் கடவுளையும், எவ்விதத்திலும் இழிவுபடுத்தவேண்டும் என்பது அவன் எண்ணமாகத் தோன்றவில்லை. பல சமயங்களினுடைய ஒருமையையும், பொதுமையையும் அவன் ஆங்காங்கு எடுத்துக்கூறத் தயங்கியதில்லை. "அரனதிகன் உலகளந்த அரியதிகன் என்றுரைக்கும் அறிவிலார்க்குப் பரகதி சென்றடைவரிய பரிசேபோல்" என்று கிட்கிந்தாகாண்டம் 'நாடவிட்ட' படலத்தில் சிறப்பாகப் பாடிய கவிஞன் இவ்வாறு சிவனைக் குறைவுறப் புகுத்திப் பாடியிருக்க மாட்டான் என்பது திண்ணம். மேலும், இராமனைத் திருமாலின் அவதாரம் என்று கொள்ளாமல்,

'சூலமுந் திகிரி சங்குங்கரகமுந் துறந்து தொல்லை
ஆலமு மலரும் வெள்ளிப் பொருப்பும்விட்டயோத்தி வந்தான்'

என்று மூவரின் அவதாரமே என்று பொங்கிப் புகழ்கின்ருன். மற்றும், கம்பன் சிவனிடத்தில் அதிகப் பற்றும் மதிப்பும் கொண்டவன் என்பதற்கும், சிவனுடைய இயல்புகளை நன்கு விரிவாக உணர்ந்திருந்தான் என்பதற்கும் சான்ருக நூற்றுக்கணக்கான குறிப்புக்களை இராமாவதார நூலில் காணலாம்."

என்னும் பிள்ளையின் கூற்றுக்களுக்கும் பதில் உரைப்போம் இனி.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்

ஸம்புடம்-15] [ஸஞ்சிகை-9

# கம்பனின் சமயம்

''எந்தச் சமயத்தையும், எந்தக் கடவுளையும் எவ்விதத்திலும் இழிவுபடுத்தவேண்டும் என்பது அவன் (கம்பன்) எண்ணமாகத் தோன்றவில்லை'' என்கிறார் பிள்ளை. சிவன் திருமாலிடம் சென்று, அவருடைய திருவடியில் வீழ்ந்தான் என்று பாடிவிட்டால், கம்பன் சிவனை இழிவுபடுத்திவிட்டான் என்று ஆகிவிடும் என்று பிள்ளை கருதுகிறார் என்று புலனாகிறது. இத்தகைய இழிவை அவன் எந்தக் கடவுளின் மேலும் சுமத்தமாட்டான் என்றும் கூறுகிறார் பிள்ளை. பிள்ளை தம் இஷ்டப்படி பல பாடல்களைத் திருத்தி வெளியிட்டிருக்கும் கழகப்பதிப்பில் திருவவதாரப்படலத்திலேயே சிவன் ஒருவனைத்தவிர, பிரமன், இந்திரன் முதலான எல்லாக் கடவுளரும் திருமாலிடம் சென்றதாகவும், அவருடைய திருவடியில் வீழ்ந்ததாகவும் பாடங்கள் காண்கின்றன. இப்படி மற்ற எல்லாக் கடவுள்களின்மீதும் சுமத்தப்பட்டிருக்கும் இந்த 'இழிவை' சிவன் ஒருவன்மேலும் சுமத்திவிட்டால் என்ன குறை வந்துவிடும்? அவர்களுக்கு இது இழிவில்லையானல், சிவனுக்குமாத்திரம் இது எப்படி இழிவாகிவிடும்?

இக்கேள்விகளுக்கு நேர்மையுடன் பதில்கூறும் தைரியம் பிள்ளைக்கு இருக்குமானல், ''சிவனை நானும், என்னைச் சேர்ந்தவர்கள் சிலரும் பரம்பொருளாகக் கொண்டாடிவருகிறோம். மற்ற தேவர்களை அப்படிக் கொண்டாடுவதில்லை. அதனல் தான் கம்பன் சிவன் திருமால் திருவடியில் வீழ்ந்ததாகப் பாடியதை நான் இழிவாகக் கருதினேன். இரண்டு சுவடிகளைக் கண்டுபிடித்து திருவவதாரப்படலத்தில் பல பாட்டுகளை மாற்றினேன்'' என்றுதான் பதில்கூறமுடியும். ''கழகப்பதிப்பி

லேயேவேறிடங்களிலே சிவன் திருமால் திருவடிகளில் வீழ்ந்த தாகப் பாடங் காண்கிறதே! இது சிவனுக்கு இழிவில்லையா?'' என்று நாம் கேட்டால், ''என்ன செய்வேன்? அவ்விடங்களில் பாடங்களைத் திருந்தும் உரிமையை என்னிடம் கொடுக்க வில்லையே'' என்றுதான் பதில் கூறமுடியும். இக்கேள்வி களுக்கு வேறுவிதமாக பதில்கூறமுடியுமானால் கூறட்டும்.

இப்படி அவரவர்கருத்துக்கு ஏற்றவாறெல்லாம் காவியங் களைத் திருத்திக்கொண்டுபோனால், பண்டைத்தமிழிலக்கி யத்தில் ஒன்றுகூட நமக்கு உண்மையாகவும், முழுமை யாகவும் கிடைக்காது. பரிபாடல் முதலான சங்கவிலக்கியங் களிலே திருமால் ஒருவனையே வேதமுதல்வனாகவும், முழு முதல்வனாகவும், எல்லாவுலகையும் படைத்து, அளித்து, அழித்து, உண்டு, உமிழ்ந்து, அளந்து, வியாபிப்பவனாகவும், ஒத்தாரும் மிக்காரும் இல்லாதவனாகவும், மோக்ஷமளிப்ப வனாகவும் பாடியிருக்கிறார்கள் பண்டைத்தமிழர்கள். இப்படி வேறு எந்ததெய்வத்தையும் பாடவில்லை. ஐந்தாம் பரி பாடலிலே, சிவனும் பார்வதியும் புணர்ந்து வீர்யம் விழுந்த தனால் முருகன் உண்டானான் என்று பாடியிருக்கிறார்கள். இதிலிருந்து சங்ககாலத்தில் திருமால் ஒருவனே பரம் பொருள், மற்ற எல்லாதேவர்களும் ஜீவர்களே என்னும் விஷயத்தில் தமிழர்களிடையே கருத்து வேற்றுமையே இல்லை என்று விளங்குகிறது. பிற்காலத்தில் தோன்றிய பண்டை நூல்களும் இதை வலியுறுத்துகின்றன. சமயப் பற்றில்லாத திருவள்ளுவர் பாடிய திருக்குறளில் திரு மாலை எல்லாவுலகையும் அளந்தவனாகப் பாடியிருப்பதும், சமணர் பாடிய சிலப்பதிகாரத்தில் திருமாலை அறுபொருள் [அற்றுத் தீர்ந்த பொருள்] என்று அமரர்கணம் தொழு தேத்துவதாகவும், பிரமனையுள்ளிட்ட எல்லாவுலகையும் அவன் படைத்ததாகவும், உண்டதாகவும் பாடியிருப்பதை யும் காணலாம். பிள்ளையின் கையில் இவற்றைப் பதிப்பிக் கும் பொறுப்பைக் கொடுத்தால் இவையெல்லாவற்றையும் திருத்திவிடுவார் என்பதில் ஐயமில்லை.

பண்டைத் தமிழிலக்கியங்களைப் படித்துப்படித்து அநு பவித்திருந்த கம்பன், அவர்களை அடியொற்றி நூற்றுக்கணக்

கான பாடல்களில் திருமால் ஒருவனையே முழுமுதல்வனாகவும் வேதமுதல்வனாகவும், எல்லாவுலகையும் படைத்து, அளித்து அழித்து, உண்டு, உமிழ்ந்து, அளந்து, வியாபிப்பவனாகவும் ஒத்தாரும் மிக்காரும் இல்லாதவனாகவும், மோக்ஷமளிப்பவனாகவும், பிரமன், சிவன் முதலான மற்ற தெய்வங்கள் எல்லாம் அவனுக்குக் கீழ்ப்பட்ட ஜீவர்களே என்றும் பாடியிருக்கிறான். இப்பாடல்களையும், "அரனதிகன்" "சூலமும் திகிரி சங்கும்" என்னும் பாடல்களுக்கு உண்மைப்பொருளையும் காட்டுவோம் இனி.

காவியத்தின் தொடக்கத்தில் தம் சமயக்கருத்தைக் காட்டுவது என்பது கவிகளின் மரபு. இம்மரபையொட்டிக் கம்பனும் தன் காவியத்தின் தொடக்கத்திலேயே தன் சமயக்கருத்தைத் தெளிவாகக் காட்டியிருக்கிறான்.

"உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலைபெறுத்தலு(ம்) நீக்கலு(ம்) நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவ ரன்னவர்க் கேசர ணாங்களே"

என்பது பாலகாண்டத்தில் முதற்பாடல். இதற்குக் கழகப் பதிப்பிலுள்ளபடி பொழிப்புரை பின்வருமாறு:-"எல்லா உலகங்களையும் தோற்றுவித்தலும், நிலைபெறும்படி செய்தலும், அழித்தலும் ஆகிய செயல்களை ஒழியாத அளவற்ற விளையாட்டாக உடையவர் எவரோ அவர் தலைவர்; அவர்க்கே நாங்கள் அடைக்கலம்" என்று. இப்பாட்டில் வேதாந்தங்களில் ப்ரஹ்மலக்ஷணமுரைத்த வழியிலே 'உலகையெல்லாம் படைத்து, அளித்து, அழிப்பவர் எவரோ அவரே பரம்பொருள்; நாங்கள் அவரையே சரணடைந்தோம்' என்று பரம்பொருளுக்கு இலக்கணமுரைத்து, அவரைச் சரணம் புகுந்தார் கம்பநாட்டாழ்வார்.

இதற்குமேல், பிரமன், விஷ்ணு, உருத்திரன் என்னும் மூவரும் முறையே படைத்தல், அளித்தல், அழித்தல் என்னும் முத்தொழிலையும் செய்பவர்கள் என்று உலகில் ப்ரஸித்தியிருக்க, முத்தொழிலையும் ஒருவனே செய்கிறான்; அவனே பரம்பொருள் என்று கூறுகிறீரே என்னும் ஐயம் எழும். இவ்வையத்தைப் போக்குவதற்காக எழுகின்றது இரண்டாவது பாடல்.

''சிற்கு ணத்தர் தெரிவரு நன்னிலை
எற்கு ணர்த்தரி தெண்ணிய மூன்றனுள்
முற்கு ணத்தவரேமுத லோர் அவர்
நற்கு ணக்கட லாடுத(ல்) நன்றரோ''

என்னும் இவ்விரண்டாவது பாடலுக்குக் கழகப்பதிப்பி லேயே கொடுக்கப்பட்டிருக்கும் பொழிப்புரை- ''ஞானிகளும் உணர்தற்கு அரிய (அத்தலைவருடைய) நல்ல இயல்பை (அறியாமையுடைய) என்னால் உணர்த்தல் இயலாது; எண் ணப்பட்ட மூன்று குணங்களுள் முதலாவதாகிய சத்துவ குணம் உடையவரே தலைவர்; அவருடைய நல்லகுணமாகிய கடலிலே மூழ்கித் திளைத்தலே இன்பம்'' என்பதாகும். மூவர் முத்தொழிலைச் செய்வதாகப் பிரசித்தியிருந்தபோதி லும், அவர்களில் இருவர் முறையே ரஜோகுணத்தையும், தமோகுணத்தையும் கொண்டவர் என்பதும் பிரசித்தமாகை யால், அவர்களிருவரும் முழுமுதல்வராகமுடியாது. அம்மூவ ரில் சத்துவகுணம் உடையவனே முத்தொழிலையும் செய்யும் முழுமுதல்வனாகமுடியும். ஆகையால், மும்மூர்த்திகளில் ரஜோ குணமும் தமோகுணமும் நிறைந்த இருமூர்த்திகளின் சரிதை களைவிட்டிட்டு சத்துவமூர்த்தியின் குணங்களைக் காட்டும் ராமசரிதைக் கடலிலே குடைந்தாடப்போகிறேன் என்று உணர்த்துகிறான் கம்பன் இவ்விரண்டாம் பாடலில். விஷ் ணுவே சத்துவகுணமுடையவர் என்பதும், பிரமனும், உருத்திரனும் முறையே ரஜோகுணத்தையும் தமோகுணத் தையும் உடையவர் என்பதும் ஆயிரக்கணக்கான வேதசாஸ் திர வசனங்களில் ஸுப்ரஸித்தமான விஷயம். இவ்விஷ யத்தை ''ஸாத்விகவிஜயம்'' என்னும் நூலிலே நாம் பலவரு ஷங்களுக்கு முன்னமே நிலைநாட்டியிருப்பதும் இது பற்றிய விவாதத்தைத் தொடங்கிய காமகோடி பீடாதிபதியான சங்கராசாரியார் இதற்கு இன்றளவும் பதிலுரைக்கமுடியா மல் மௌனமாயிருப்பதும் உலகமறிந்த விஷயம். ''அவர் நற் குணக்கடல் ஆடுதல் நன்று'' என்று தொடங்கி, விஷ்ணுவின் அவதாரமான ராமனின் கதையைப்பாடமுற்பட்டதிலிருந்தே விஷ்ணுமூர்த்தியே சத்துவகுணமுடைய முழுமுதல்வன் என்று கம்பன் கருதினான் என்று தெளிவாக விளங்குகிறது.

# கம்பனின் சமயம்

இப்படி முதலிரண்டு பாடல்களில், ஸத்வகுணமுடைய வனே முத்தொழில்களையும் செய்யும் முதல்வன் என்று நிர்ணயித்தபோதிலும், "எங்கள் தெய்வம்தான் ஸத்வ குணத்தையுடையது" என்று பொய்யைக் கூறிக்கொண்டு சிலர் முன்வரக்கூடுமென்று கருதி, மூன்றுவது பாடலிலே வேதமுதல்வனை பரம்பொருளின் தனிப் பெயரைக்காட்டி அவனே மோக்ஷத்திற்கு உண்மையான உபாயமாகவும், மோக்ஷத்தில் அடையும் பயனுகவுமிருப்பவன் என்றும், மோக்ஷம் தவிர்ந்த மற்ற பலன்களில் பற்றில்லாதவர்கள் அவனுடைய திருவடிகளைத்தவிர வேறு யார் காலிலும் விழ மாட்டார்கள் என்றும் கூறிப் பரதத்வநிர்ணயம் செய்கிறுர் கம்பநாட்டாழ்வார்.

"ஆதி யந்தம் 'அரி'என யாவையும்
ஓதி னுர்அல கில்லன உள்ளன
வேதம் என்பன மெய்ந்நெறி நன்மையன்
பாதம் அல்லது பற்றலர் பற்றிலார்."

என்னும் இம்மூன்றும்பாடலுக்கு, "அளவற்றனவும் என்றும் அழியாது நிற்பனவும் ஆன வேதம் என்று சொல்லப்பட்ட எல்லாவற்றையும் தொடங்கும்போதும், முடிக்கும்போதும் 'அரி: ஓம்' என்று கூறிக் கற்றவர்களும் பற்றற்றவர்களு மான பெரியோர்கள், உண்மையான நெறியும் பயனுமாக விளங்கும் இறைவனுடைய திருவடிகளையே (தஞ்சமாகப்) பற்றுவர்; பிறிதொன்றைப் பற்றுர்" என்று கழகப்பதிப்பி லேயே உரை எழுதப்பட்டுள்ளது. குறிப்புரையில் "எல் லாத் தர்மங்களையும்விட்டு என்னைப் பற்று" என்னும் கீதா சரமச்லோகப்பகுதியும் எடுத்துக் காட்டப்பட்டது. வேதத் தில் ஆதியந்தங்களில் "ஹரி: ஓம்" என்று ஓதப்படுவதி லிருந்தே ஹரியே வேதமுதல்வனும், முழுமுதல்வனும் மெய்ந்நெறிநன்மையனுமாவான் என்னும் கம்பர்கருத்து இப்பாடலில் தெளிவாக விளங்குகிறது. ஆக, பாலகாண் டத்தின் கடவுள்வாழ்த்துப்பாடல்களே கம்பன் பரம

வைஷ்ணவன் என்று காட்டுகின்றனவென ஐயமற விளக்கப்பட்டது. இனி மற்ற பாடல்களைக் காண்போம்.

ஆற்றுப்படலம்.

இரண்டாம் பாடலிலே "நீறணிந்த கடவுள்" [சாம்பலைப் பூசிக்கொண்ட கடவுள்] என்று சிவனைத் தாழ்த்தியும், "திருமங்கை தன் வீறு அணிந்தவன்" [திருமங்கையைத் தன் பெருமை வெளிப்படும்படி (திருமார்பில்) அணிந்தவன்] என்று திருவுடைய திருமாலை உயர்த்தியும் பாடினர்.

"செறிநறும் தயிரும் பாலும்
வெண்ணெயும் சே(ர்)ந்த நெய்யும்
உறியொடு வாரி யுண்டு
குருந்தொடு மருதம் உந்தி
மறியுடை ஆயர் மாதர்
வளைதுகில் வாரு நீரால்
பொறிவரி அரவின் ஆடும்
புனிதனும் போலு மன்றே"

[கருத்துரை:—தயிர், பால், வெண்ணெய், நெய், ஆகியவற்றை உறியோடு விழுங்கி, குருந்தமரம், மருதமரம் ஆகியவற்றைச் சாய்த்து, ஆய்ச்சிகளின் வளைதுகில்களைக் கைக்கொள்ளும் தன்மையால், புனிதனான கண்ணனைப்போன்றிருந்தது வெள்ளம்.] என்னும் பாடலிலே கண்ணனைப் புனிதனெனக்கூறி அவனிடம் தனக்குள்ள பக்தியை அழகாக வெளிப்படுத்தினர்.

நாட்டுப்படலம்.

"தாலியைம்படை தழுவு மார்பிடை" என்ற பாட்டில், தாய்மார்களும், குழந்தைகளும் மார்பில் விஷ்ணுவினுடைய பஞ்சாயுதங்களை அணிந்திருப்பர் என்னும் வைஷ்ணவ மரபைக் காட்டினர்.

நகரப்படலம்.

"தங்குபேர் அருளும் தருமமும் துணையாத்
தம் பகைப் புலன்களைந் தவிக்கும்
பொங்குமா தவமும் ஞானமும் புணர்ந்தோர்
யாவர்க்கும் புகலிடம் ஆன

செங்கண்மால் பிறந்(து) ஆண்(டு) அளப்பரும் காலம்
திருவின் வீற்றிருந்தமை தெரிந்தால்
அங்கண்மா ஞாலத்(து) அந்நகர் ஒக்கும்
பொன்னகர் அமரர்நாட்டு யாதோ?''

என்ற பாடலில் இந்திரியங்களைவென்று தவமும் ஞானமும் பொருந்தப்பெற்ற அனைவர்க்கும் புகலிடமாயிருப்பவன் செங்கண்மால் என்றார். இவரே சிவனுக்குப் பெருமை சொல்லும்போது தாடகை வதைப்படலத்தின் மூன்றும்பாடலில். ''வாலுணர்வு மேல்முடுகினர் அறிவுசென்று உற்றவானவன்'' [* தூய்மையான தத்துவஞானத்தை அடையவிரும்பியவர்களின் அறிவானது சென்று பொருந்துதற்கு இடமாகிய சிவபெருமான்] என்று ஞானத்தை அடையவிரும்புகிறவர்கள் சிவனை உபாஸிப்பார்கள் என்று பாடியது இங்கு உணரத்தக்கது. இவ்விருபாடல்களிலிருந்தும் ஞானத்தை அடைய விரும்பியவர்கள் சிவனை உபாஸித்து ஞானத்தை அடைவர் என்றும், ஞானமடைந்தவர்கள் திருமாலை உபாஸித்து மோக்ஷமடைவர் என்றும் கூறும் வைஷ்ணவமதம் கம்பர் உகந்தது என்று விளங்குகிறது.

''எல்லை நின்ற வென்றியானை என்ன நின்ற முன்னம் மால்
ஒல்லையும்பர் நாடளந்த தாளின் மீ(து) உயர்ந்தவால்''

என்னும் பாடலிலே திருமால் தேவருலகங்களையெல்லாம் திருவடியால் அளந்த விருத்தாந்தத்தைப் பேசுகிறார்.

## திருவவதாரப்படலம்

இப்படலத்திலேயே பிள்ளை பல பாடல்களை மனம் போனவாறு திருத்தி வெளியிட்டுள்ளார். அப்படித் திருத்தப்பட்டபின்னும் கம்பனின் கடவுட்கொள்கையை கழகப் பதிப்பிலுள்ள பாடல்களே வெளிக்காட்டுகின்றன என்பதைக் காட்டுவோம்.

''அலைகடல் நடுவண் ஓர் அனந்தன் மீமிசை
மலையென விழிதுயில் வளரும் மாமுகில்
கொலைதொழில் அரக்கர்தம் கொடுமை தீர்ப்பன் என்(று)
உலைவுறும் அமரருக்கு உரைத்த வாய்மையை''

* இப்பொருள கழகப்பதிப்பிலேயே தரப்பெற்றுள்ளது.

என்ற பாடலில் "உலைவுறும் அமரர்கள்" [துன்பமுறும் அமரர்கள்] என்று திருமால் தவிர்ந்த எல்லாத் தேவர்களும் துன்பம் நிறைந்த ஜீவர்களே என்றும், அவர்களுக்கு அபயமளிப்பவன் துன்பம் சிறிதும் அற்ற பரம்பொருளான திருமாலே என்றும் காட்டினர். இப்பாடல்களுக்குப் பின்னல் வரும் பல பாடல்களில் சிவன் தேவர்களோடு சென்று திருமாலை வணங்கினன் என்று பாடியிருக்குமிடங்களைப் பிள்ளை திருத்திவிட்டார். பிள்ளை ஆதாரமாகக்கொண்ட இருசுவடிகளும் அவரைக் கைவிட்டுவிட்டன என்பதை முன்னமே காட்டினேம். பிள்ளை திருத்திப் பதிப்பித்த திருவவதாரப்படலப் பாடல்களும் கம்பன் வைஷ்ணவனே என்பதைக் காட்டுகின்றன. சூரியனின் ஒளியைக் கையால் மறைக்கமுடியுமோ? "படுபொருள் உணர்ந்த அப்பரமன் யாமினி அடுகிலம்" என்ற பகுதியில் "என்னல் இப்போது ராவணனுடியரோடு சண்டைசெய்யமுடியாது" என்று சிவன் தன் இயலாமையைக் கூறியதாகத் தெளிவாகக் காட்டப்பட்டுள்ளது. "(அவ்வரக்கர்களைக்) கொல்வதாக (எண்ணம்) இல்லை" என்று பாட்டில் இல்லாத 'எண்ணம்' என்னும் பதத்தை வருவித்துக்கொண்டு பொருந்தாப் பொருளை எழுதியிருக்கிறார் பிள்ளை. இது அவருடைய சைவப்பற்றையே காட்டுகிறது.

"யாமினி அடுகிலம் எனமறுத்து அவரொடேகினன்" என்று பெரும்பாலான சுவடிகளிற் காணும் பாடம், "யாமினி அடுகிலம் மாயனேடு அறைதிர் என்னவே" என்று சைவர்களால் திருத்தப்பட்டு விட்டது. இதன்படி "மாயனிடம் உங்கள் துன்பத்தைக் கூறுங்கள்" என்று சிவன் கூறிவிட்டான் என்று விளங்குகிறது. இப்படிப்பாடம் உண்மையில் இருந்ததாகில் அடுத்த பாடலில் உடனே தேவர்கள் திருமாலிடம் சென்றதாக இருக்கவேண்டும். கழகப்பதிப்பில் அடுத்தபாடலில் தேவர்கள் பிரமனிடம் சென்றார்கள் என்றே உள்ளது. இதிலிருந்து "மாயனேடறைதிர் என்னவே" என்றது சைவர்களால் வேண்டுமென்றே திருத்தப்பட்டது என்று கையிலங்கு கனியாக விளங்குகிறது.

## கம்பனின் சமயம்.

"ஒரு பொய்யை மறைக்க ஒன்பது பொய்கள்" என்னும் உலகவழக்கிற்கேற்ப, ஒரு பாடலைத் திருத்தியதோடு பொருந்த வேண்டுமென்பதற்காக அடுத்துவரும் பல பாடல்களையும் திருத்திவிட்டனர் சைவர்கள். "கறை மிடற்றிறைவனும்" "கறைமிடற்றண்ணலும்" என்று பல பிரதிகளில் தொடங்கும் அடுத்த பாடல் 12, 27 இலக்கமுள்ள இரண்டு பிரதிகளில் மாத்திரம் "கறைமிடற்றிறை சொல" என்று திருத்தப்பட்டது. "அமரர் கண்டகர் இடிசிகர் வினையமது இயம்பினாரரோ" என்று பல பிரதிகளில் காணும் அடுத்த பாடலின் பாடம் "அமரர் கண்ணுதல் உடையவன் அருளியது உரைத்திட்டாரரோ" என்று இவ்விரண்டு பிரதிகளிலே மாத்திரம் திருத்தப்பட்டுள்ளது. அடுத்த பாடலில் "தோகைபாகற்குறச் சொல்லினனரோ" என்று பல பிரதிகளில் காணும் பாடம் இவ்விரண்டு பாடல்களில் மாத்திரம் "ஏகியே வைகுந்தவாயில் நண்ணினர்" என்று திருத்தப்பட்டுள்ளது; இவ்வண்ணமே பின்வரும் பல பாடல்களிலும் சிவன் தேவர்களோடு வந்தான் என்பதைக்காட்டும் பல பிரதிகளிலுள்ள பாடங்கள் அனைத்தும் இவ்விரு பிரதிகளில் மாத்திரம் திருத்தப்பட்டுள்ளது. "எழுந்தனர் கறைமிடற்றிறையும்" என்று தொடங்கும் ஒருபாடலில் மாத்திரம் ஒரு பிரதிக்காரர் திருத்த மறந்துபோய்க் கையும் களவுமாய் அகப்பட்டுக்கொண்டு பிள்ளையைக் காட்டிக்கொடுத்தை முன்னமே காட்டினேம். இவற்றையெல்லாம் காணும் நடுநிலையாளர்க்குக் கம்பராமாயணத்தை வேண்டுமென்றே திருத்தினவர்கள் சைவர்களேயொழிய வைஷ்ணவர்களல்லர் என்பது விளங்கும். நிற்க, பிள்ளையால் தாறுமாறுகத் திருத்திப் பதிப்பிக்கப்பட்ட திருவவதாரப்பதிப்பின் படியும் கம்பனின் சமயக்கருத்து தெளிவாக விளங்குவதைக் காட்டுவோம் இனி.

191-வது பாடலில் "பரகதி உணர்ந்தவர்க்கு உதவும் பண்ணவன்" என்று திருமாலைக் குறித்துப் பாடப்பட்டது. "(தன்னை உள்ளபடி) அறிந்தவரான ஞானிகளுக்குப் பரம பதத்தைக் கொடுக்கும் கடவுளான அத்திருமால்" என்று பிள்ளையாலேயே பொழிப்புரை எழுதப்பட்டது. 'பரகதி' 'பரமபதம்' என்றால் மேலான நிலையான மோக்ஷநிலையைக் குறிக்கிறது என்பதை எவரும் மறுக்கமுடியாது. இப்பாடலில் மோக்ஷநிலையைக் கொடுப்பவன் திருமால் என்று பாடியிருப்பதொன்றே கம்பன் பரமவைஷ்ணவன் என்பதைக் காட்டுகிறது. சிவனுக்கு இப்பெருமையைக் கம்பன் எங்காவது கூறியிருக்கிறானா என்று பிள்ளை ஆராயட்டும். 193, 194 பாடல்களில் பிரமன் முதலான எல்லாத் தேவர்களும் திருமாலின் திருவடியில் வீழ்ந்து துளவத்தாண்மலர்களைத் தலையில் அணிந்தனர் என்று காண்கிறது. இப்பெருமையைச் சிவனுக்கு எங்கேயாவது கம்பன் கூறியிருக்கிறானா என்பதையும் பிள்ளை ஆராயவேண்டும். பல வருடங்கள் ஆராய்ந்தாலும் ஓரிடங்கூடக் கிடைக்காது என்பது கல்வெட்டு. 195-வது பாடலில் "என்னையாளுடையவன் தோள்நின்று எம்பிரான்" என்கிறான் கம்பன். இங்கு கருடனை 'என்னை யாளுடையவன்' என்றும், திருமாலை 'எம்பிரான்' என்றும், 205-வது பாடலில் "என்னையாளுடைய ஐயன்" என்றும் வழங்கியிருப்பதுபோலே சிவனை வழங்கியிருக்கிறானா என்றும் பிள்ளை ஆராயட்டும்.

198-வது பாடலில் "எங்கள் நீள் வரங்களால்" என்று (12, 27 சுவடிகள் உட்பட) பல பிரதிகளில் காணும் பாடத்தை 44-என்னும் ஒரே சுவடியை ஆதாரமாகக் கொண்டு "எங்கும் நீள் வரங்களால்" என்று திருத்திவிட்டார் பிள்ளை. 'எங்கள் வரம்' என்றிருந்தால் இராவணாதியர்க்கு வரங்கொடுத்த சிவனையும் காட்டிவிடுமென்று கருதி 'எங்கும்' என்னும் ஒரு சுவடிப் பாடத்தைப் பிள்ளை ஆதரித்தார்போலும்! நுணுகி ஆராய்ந்தால், இப்படிப் பல பாடல்

களில் பிள்ளையின் சைவப்பற்றைக் காட்டும் திருத்தங்கள் வெளியாகின்றன. நிற்க;

200-வதுபாடலில் 'அருளின் ஆழியான்' [கருணைக்கடல்] என்றும் 204-ம் பாடலில் "மாயிரு ஞாலமுண்டோன்" [மிகப் பெரிய உலகத்தை உட்கொண்டவன்] என்றும், 284-வது பாடலில் "ஒரு பகல் உலகெலாம் உதரத்துட்பொதிந்து அருமறைக்குணர்வரும் அவனை" என்றும், 299-வது பாடலில் "கராமலையத் தளர் கைக்கரி எய்த்தே அராவணையில் துயில்வோய்! என அந்நாள் விராவி அளித்தருள் மெய்ப்பொருள்" என்றும் 313-வது பாடலில் "மறையும் தடவுதல் அறிவரு தனிமுதல்" [வேதத்தாலும் ஆராய்ந்து அறியவொண்ணாத ஒப்பற்ற காரணப்பொருள்] என்றும், 316-ம் பாடலில் "முப்பரம்பொருளுக்கு முதல்வன்" என்றும் திருமாலைப்பாடியிருப்பதாகக் கழகப்பதிப்பே காட்டுகிறது. பரம்பொருளுக்கேயுரிய இப்பெருமைகளை சிவன் முதலான வேறு எந்த தெய்வத்துக்கும் கம்பன் எங்குமே காட்டவில்லையே! இவற்றிலிருந்து பிள்ளை திருத்திய கழகப்பதிப்பிலுள்ளபடி பார்த்தாலும் திருமாலே பரமாத்மா என்பதே கம்பன் கருத்து என்பது திருவவதாரப்படலத்தினின்றும் விளங்குகிறது. இனி, அடுத்த படலத்தைக் காண்போம்.

## கையடைப்படலம்.

மற்ற பதிப்புகளிலிருந்து பாடல்களை எடுத்தால் பிள்ளை 'இடைச்செருகல்' என்று கூறுவாராகையால், கழகப்பதிப்பிலிருந்தே பாடல்களை எடுத்துக்காட்டுவோம். 329-வது பாடலில் "பனிநீர்க்கங்கை புடையூற்றும் சடையானும் நான்முகனும் புரந்தரனும் புகுந்து செய்யும் இடையூற்றுக் கிடையூரு யான் காப்பன்" என்னும் தசரதன் கூற்றில், வேள்விக்கு இடையூறு செய்யக்கூடியவராய், தசரதனல் வெற்றிகொள்ளத்தக்கவரான தேவர்களை எடுக்கும்போது திருமாலை விட்டு பிரமருத்திர இந்திரர்களை மாத்திரம் எடுத்திருப்பது கம்பன் திருமாலையே யஜ்ஞபுருஷனை பரம்பொருளாகக் கருதினன் என்பதையும் உருத்திரனை ஜீவர்களில்

ஒருவனுகவே கருதினுன் என்பதையும் காட்டுகிறது. 336-ம் பாடலில் "கொற்றவில் ஒன்று தாங்கினுன் உலகம் தாங்கினுன்" என்று இராமனைக் குறிப்பிடுகிருன் கம்பன். கழகப்பதிப்புப் பொழிப்புரையில் "எல்லா உலகங்களையும் தாங்கின(திருமாலின் அம்சமான)இராமன்" என்று உள்ளது. 341-ம் பாடலில் இராமனை "எவர்க்கும் மேல் நின்ருன்" என்று குறிப்பிடுகிருன் கம்பன். இவையெல்லாம் கம்பன் திருமாலையே உலகம் தாங்கி எவர்க்கும் மேல் நிற்கும் பரம்பொருளாகக் கருதினுன் என்று தெளிவாகக் காட்டுகின்றன. இத்தகைய அடைமொழிகளின் ஒன்றைக்கூட சிவனைக் குறித்துக் கம்பன் வழங்கியது கிடையாது. இனி, அடுத்த படலத்தைக் காண்போம்.

### தாடகைவதைப்படலம்.

"தவமும் ஞானமும் புணர்ந்தோர் யாவர்க்கும் புகலிடமான செங்கண்மால்" என்று நகரப்படலத்திலும், "பரகதி உணர்ந்தவர்க்கு உதவு பண்ணவன்" என்று திருவவதாரப் படலத்திலும் ஞானமடைந்தவர்களுக்கு மோக்ஷத்தை அளிப்பவன் திருமால் என்று உரைத்தவர், இத்தாடகைவதைப் படலத்தின் மூன்ரும்பாடலில் "வாலுணர்வுமேல் முடுகினுர் அறிவுசென்று உற்ற வானவன்" என்று பரம்பொருளறிவற்றவர்களுக்கு அவ்வறிவையளிப்பவன் சிவன் என்னும் சாஸ்திரார்த்தத்தைக் காட்டுகிருர். முதல்பாடலில் (342) "திங்கள் மேவுஞ் சடைத் தேவன்" என்றும், இரண்டாம் பாடலில் (343) "வாரணத்துரிவையான்" என்றும் சிவனுக்குள்ள பெருமைகளைப் பேசி அவன் மதனனை அழித்த கதையைக் கூறும்போது, "ஆரணத்துறையுளாய்!" [வேதங்களை உறைவிடமாகக் கொண்டவனே!] என்று வேதமுதல்வனை திருமாலுக்கே உரிய பெருமையைச் சொல்லி விசுவாமித்திரன் வாயிலாக இராமனை விளிக்கிருன் கம்பன். இத்தகைய பரம்பொருளுக்கேயுரிய பெருமைகளைத் திருமாலுக்கே காட்டியிருக்கிருன், சிவனுக்குக் கம்பன் ஓரிடத்திலும் காட்டவில்லை என்று நாம் எத்தனைதடவை எழுதினுலும் அது கூறியது கூறல் என்னும் குற்றத்துக்கு இலக்காகாது.

# கம்பனின் சமயம்

''சூலமும் திகிரி சங்கும்'' என்னும் ஒருபாடலை மேலெழக் கண்டு இராமன் மும்மூர்த்திகளின் அவதாரம் என்று பிதற்றுவதும் கம்பராமாயணத்தில் ஆயிரக்கணக்கான பாடல்களில் முழுமுதல்வனை திருமாலின் அவதாரமே இராமன் என்று காட்டியிருப்பதோடு பொருந்தாது. திருவவதாரப் படலத்தில் திருமாலே இராமனாகப்பிறந்தான் என்று தெளிவாகக் காட்டியதோடு நில்லாமல் படலந்தோறும் திருமாலுக்கே யுரிய பெருமைகளையிட்டன்றோ கம்பன் இராமனை வருணிக்கிறான். உதாஹரணமாக இத்தாடகை வதைப்படலத்தில் ''சங்குறை கரத்தொரு தனிச் சிலை தரித்தான்'' ''மாலும் அக்கணம்'' என்று இராமனைக் குறிப்பிட்டிருப்பதைக் காணலாம். மேல் படலங்களிலும் காட்டுவோம். ''சூலமும் திகிரி'' என்னும் பாட்டின் உண்மைப்பொருளை அப்பாடல் வரும்போது விளக்குவோம்.

வேள்விப்படலம்.

''தங்கள் நாயகரில் தெய்வம்
தான் பிறிது இல்' என்று எண்ணும்
மங்கைமார் சிந்தைபோலத்
தூயது மற்றும் கேளாய்!
எம் கண் நால் மறைக்கும் தேவர்
அறிவுக்கும் பிறர்க்கும் எட்டாச்
செங்கண்மால் இருந்து மேல் நாள்
செய்தவம் செய்தது அன்றே'' [434]

என்னும் பாடலில் திருமாலை வேதங்களுக்கும், பிரமருத்திராதிதேவர்கட்கும் மற்றையோர்க்கும் எட்டாதவன் என்று கூறுகிறான் கம்பன். இப்பெருமை பரம்பொருளுக்கே உரியது. சிவன் முதலிய வேறு தேவர்கட்குக் கம்பனால் எவ்விடத்திலும் பாடப்பெறாதது.

''பாரின்பால் விசும்பின்பாலும்
பற்று அறப் படிப்பது, அன்னான்
பேர்' என்பான், 'அவன் செய் மாயப்
பெரும்பிணக்கு ஒருங்கு தேர்வார்
ஆர்?' என்பான், அமல மூர்த்தி
கருதியது, அறிதல் தேற்றும்;
ஈர் ஐம்பான் ஊழிக் காலம்
இருந்தவம் இயற்றியிட்டான்.'' [435]

என்னும் பாடலில் திருமாலின் பெயரே ஸம்ஸாரஸம்பந்தத்தை அறுக்கும் என்றும், அவனுடைய மாயையை எவராலும் அறியமுடியாது என்றும் பரம்பொருளுக்கேயுரிய பெருமைகளைப் பாடினர்.

''அண்டமும் முற்றும் அகண்டமும் மேல்நாள்
உண்டவனும்'' [444]

என்றவிடத்தில் உலகமனைத்தும் உண்டமையாகிற பரம்பொருட்கேயுரிய பெருமையைப் பாடினர்.

''நின்ற கால், மண் எலாம் நிரம்பி, அப்புறம்
சென்று பாவிற்று இலை; சிறிது பார் என
ஒன்ற வான் அகம் எலாம் ஒடுக்கி, உம்பரை
வென்ற கால், மீண்டது; வெளி பெருமையே. [454]

'உலகு எலாம் உள் அடி அடக்கி ஓர் அடிக்கு
அலகு இலாது அவ் அடிக்கு அன்பன் மெய்யதாம்;
இலை குலாம் துழாய் முடி ஏக நாயகன்,
சிலை குலாம் தோளினாய்! சிறியன் சாலவே!' [455]

'உரியது இந்திரற்கு' என உலகம் ஈந்து போய்,
விரி திரைப் பாற்கடல் பள்ளி மேவினான்;
கரியவன் உலகு எலாம் கடந்த தாள் இணை
திருமகள் கரம் தொடச் சிவந்து காட்டவே.'' [456]

என்னும் பாடல்களில் எல்லாவுலகையும் அளந்தமையாகிற பெருமையும் பாடப்பட்டது.

..................................புவனம்
ஆக்கி மற்றவை அகிலமும்
அணிவயிற்று அடக்கிக்
காக்கும் நீ, ஒரு வேள்வி
காத்தனே எனும் கருத்தே'' [475]

என்னுமிடத்தில் உலகனைத்தையும் படைத்தளித்து உண்ட பரம்பொருட்கேயுரிய பெருமை திருமாலின் அவதாரமான இராமனுக்குப் பேசப்பட்டது. ''நாயகனும்'' [438] ''அற்புதரே அறியும் தன் சிற்பதம்'' [440] ''தாழ்வில் கனக்கரியான்'' [445] ''நெடியவன்'' [452] ''ஏகநாயகன்'' [455] ''அருவினையறுக்குமாரிய'' [457] ''அண்டர் நாயக'' [466] ''அத்தாமரைக்கண்ணனும்'' [467] ''திருமகள் நாயகன்'' [470] என்னுமிடங்களில் பரம்பொருளுக்கேயுரிய அடைமொழிகள் திருமாலின் அவதாரமான வாமனனுக்கும் இராமனுக்கும் அளிக்கப்பட்டிருப்பதும் அறியத்தக்கது.

''நஞ்சட எழுதலும் நடுங்கி நாள்மதிச்
செஞ்சடைக் கடவுளை அடையும் தேவர்போல்'' [468]

என்னும் பாடலில் ஆலகாலவிஷம் கிளர்ந்தபோது தேவர்கள் சிவனையடைந்தமை காட்டப்பட்டது. இங்கு தேவர் என்றது திருமாலையொழிந்த மற்ற தேவர்களையே என்பதைப் பின்வரும் படலங்களில் காணலாம்.

அகலிகைப்படலம்

''அண்டகோளகைக்கப்புறத்து என்னை ஆளுடைய
கொண்டல் நீள்பதம்'' [482]

என்மிடத்தில் மேகவண்ணனை திருமாலின் பரமபதம் அண்டகடாகத்துக்கு அப்பாற்பட்டது என்று கூறுவதன் மூலம் அதுவே மோக்ஷலோகம் என்று காட்டினன். சிவலோகம் முதலானவற்றுக்கு எங்குமே இப்பெருமை காட்டப்பட்டதில்லை.

"உலகம் யாவையும் படைத்து அளித்து
உண்டு உமிழ் ஒருவன்
இலகும் மார்பகத்து இருந்து உயிர்
யாவையும் ஈன்ற
திலக வாள்நுதல்" [484]

என்ற பாடலில் உலகம் யாவையும் படைத்து அளிந்து உண்டு உமிழும் பரம்பொருளுக்கேயுரிய பெருமை ஸ்ரீமந் நாராயணனுக்கே பாடப்பட்டது.

"பூதநாயகன் புவிமகள் நாயகன் பொரு இல்
வேதநாயகன் மார்பு அகத்து இனிது வீற்றிருக்கும்
ஆதிநாயகி" [493]

என்னும் பாடலிலும் பரம்பொருளுக்கேயுரிய அடைமொழி கள் திருமாலுக்கு அளிக்கப்பட்டன.

"வெய்ய மாமுனி வெகுளியால், விண்ணகம் முதலாம்
வையம் யாவையும் வறுமை நோய் நலிதர வானோர்
தையல் பாகனும் சதுமுகக் கடவுளும் கூடிச்
செய்ய தாமரைத் திரு உறு மார்பனைச் சேர்ந்தார். [496]
வெஞ்சொல் மாமுனி வெகுளியால் விளைந்தமை விளம்பிக்
கஞ்சநாள் மலர்க் கிழவனும் கடவுளர் பிறரும்
'தஞ்சம் இல்லை; நின் சரணமே சரண்' எனச் சலியாது,
'அஞ்சல் அஞ்சல்' என்று உரைத்தனன் உலகெலாம்
அளந்தோன்." [497]

என்னும் பாடல்களில் பிரமனும் சிவனும் திருமாலைச் சரணடைந்தமை காட்டப்பட்டது. திருவவதாரப் படலத்தில் சிவன் திருமாலைச் சரணடைந்தான் என்று வரும் பாடலைத் திருத்தினர் பிள்ளை. இப்படலத்தின் பதிப்புப் பொறுப்பு அவரிடமில்லாமையால் இப்பாடல்களைத் திருத்த முடியாமற்போயிற்று என்பது தெளிவு. பிள்ளை அபி மானிக்கும் இரண்டு சுவடிகளில் ஒன்று சிவன் திருமாலைச் சரணடைந்ததாகவே காட்டிப் பிள்ளையைக் கைவிட்டதை முன்னமே காட்டினோம்.

# கம்பனின் சமயம்

"திறல் கொள் ஆமையாய், முதுகினில் மந்தரம் திரிய
விறல் கொள் ஆயிரம் தடக்கைகள் பரப்பி மீ வலிப்ப,
மறன் இலா முனி வெகுளியின் மறைந்தன வரவே
அறன் நிலார் மனத்து அடையலா நெடும் தகை
அமைத்தான்." [501]

என்னும் பாடலிலும், அடுத்த பாடலிலும் திருமால் அமுதங் கடைவதற்குப் பலபடியாலும் உதவியமை பேசப்பட்டது.

"வெருவும் ஆலமும் பிறையும் வெள் விடையவற்கீந்து...
திருவும் ஆரமும் அணிந்தனன் சீதர மூர்த்தி" [503]

என்னும் பாடலில் பிறர்கண்டு பயந்த ஆலகாலவிஷத்தைத் திருமாலே சிவனுக்குக் கொடுத்தான் என்று கூறுகையால், அவ்விஷத்தைக் கண்டு ஓடிய தேவர்களில் திருமாலுக்கிடமில்லை என்று விளங்குகிறது.

"ஆயது இவ்விடம், அவ்விடம் அவிர் மதி அணிந்த
தூயவன் தனக்கு உமையவின் தோன்றிய, தொல்லை
வாயுவும் புனல் கங்கையும் பொறுக்கலா வலத்த
சேய், வளர்ந்தருள் சரவணம் என்பதும் தெரித்தான்." [507]

என்னும் பாடலில் சிவனும் பார்வதியும் கலந்து பிறந்த பிள்ளையே முருகன் என்கையாலே, மூவரும் பரம்பொருளல்லர் என்று காட்டினர். வால்மீகிராமாயணத்திலும், ஐந்தாம் பரிபாடலிலும் கந்தன் பிறப்பைக்கூறும் பகுதிகள் இங்கு படித்தற்குரியவை.

"காலன் மேனியில் கருகு இருள் கடிந்து, உலகு அளிப்பான்,
நீல ஆர்கலித் தேரொடும் நிறை கதிர்க் கடவுள்,
மாலின் மா மணி உந்தியின் அயனொடு வந்த
மூல தாமரை முழுமலர் முளைத்தென, முளைத்தான்." [508]

என்னும் பாடலில் அயனைப் படைத்த மூலதாமரையுந்தியை உடையவன் திருமாலே என்றுகாட்டிப் பரதத்வநிர்ணயம் செய்தார்.

"கரந்தை மத்தமொடு எருக்கலர் கூவிளை கடுக்கை
நிரந்த பொன்சடை நின்மலக் கொழுந்து" [529]

[கரந்தை, ஊமத்தை, எருக்கு, வில்வம், கொன்றை இவற்றின் மலர்களைக் கலந்தணிந்த பொன்போலும் சடையுடையவனும், அழற்கொழுந்துபோன்ற புனிதனுமான சிவன்] என்று சிவனைக் குறிப்பிட்டிருப்பதும் காணத்தக்கது.

"அண்ட கோளகைப் புறத்ததாய், அகிலம் அன்று அளந்த
புண்டரீக மென் பதத்திடைப் பிறந்து, பூமகனுர்
கொண்ட தீர்த்தமாய், அரன் கொளப், பகிரதன் கொணர,
மண் தலத்து வந்து அடைந்தது; இம் மா நதி மைந்த!" [537]

என்னும் பாடலில் திருமால் அண்டகோளத்தையும் தாண்டித் திருவுலகளந்தருளியதையும், அவன் திருவடியைப் பிரமன் விளக்க,அதைச் சிவன் தலையில் தாங்கியதையும் கூறி ஐயமறும்படி பரதத்வநிர்ணயம் செய்தருளினர் கம்பநாட்டாழ்வார். இவரையோ சமரசவாதியென்பது? "என்னையாளுடைய கொண்டல்" [482] "எம்பிரான்" [502] என்று திருமாலையும், "என்னையாளுடை நாயகி" [483] என்று திருமகளையும், "பூமின்கேள்வன்" [550] [பூமிதேவிநாயகன்] என்று இராமனையும் கம்பன் இப்படலத்தில் குறித்திருப்பதும் காணத்தக்கது. இனி, அடுத்ததான மிதிலைக்காட்சிப் படலத்தைக் காண்போம்.

## மிதிலைக்காட்சிப் படலம்.

முதற்பாடலிலேயே சீதையை "செய்யவள்" [இலக்குமி] என்றும், இராமனைக் "கமலச்செங்கண் ஐயன்" [புண்டரீகாக்ஷன திருமால்] என்றும் குறிப்பிட்டான். பிற பாடல்களிலும் இக்குறிப்புண்டு. "உமையாள் ஒக்கும் மங்கையர்

உச்சிக்கரம் வைக்கும் கமையாள்'' [588] என்று பார்வதி யைப்போன்றவர்களால் வணங்கத்தக்கவள் சீதை என்கிருர்.

“மருங்கு இலா நங்கையும், வசை இல் ஐயனும்,
ஒருங்கிய இரண்டு உடற்கு உயிர் ஒன்று ஆயினர்,
கருங்கடல் பள்ளியில் கலவி நீங்கிப் போய்ப்
பிரிந்தவர் கூடினுல், பேசல் வேண்டுமோ.'' [601]

என்ற பாடலில் திருப்பாற்கடலில் சயனித்திருந்த திரு மாலும், திருமகளுமே ராமனும் சீதையுமாயினர் என்று காட்டினர். [மும்மூர்த்திகளின் அவதாரம் இராமன் என்று பிள்ளை எழுதியதாலேயே ஏபாவம் பரமே! என்னும் மன நிலையோடு இத்தகைய நூற்றுக்கணக்கான பாடல்களை நாம் காட்டவேண்டியிருக்கிறது.]

‘‘வண்டாய் அயன் நான்மறை பாட,
மலர்ந்தது ஒரு தாமரைப் போது,
பண்டு ஆலிலையின் மிசைக் கிடந்து
பாரும் நீரும் பசித்தான்போல்
உண்டான் உந்திக் கடல் பூத்தது,
ஓதக் கடலும் தான் வேறு ஓர்
வெண் தாமரையின் மலர் பூத்தது
ஒத்தது, ஆழி வெண் திங்கள்.'' [634]

என்னும் பாடலில் திருமாலே எல்லா உலகையும் உண்டு பிரமனை உந்திப்பூமேல் படைத்தான் என்று காட்டினுர்.

‘‘காத்த கண்ணன் மணி உந்திக்
கமல நாளத்திடைப் பண்டு
பூத்த அண்டம் பழையது" [637] என்னும் பாடலில்

திருமாலின் உந்தித்தாமரையில் உண்டானதே இவ்வண்டம் என்று காட்டினுர்.

“எண் அரிய மறையினெடு கின்னரர்கள்
இசை பாட, உலகம் ஏத்த,
விண்ணவரும் முனிவர்களும் வேதியரும்

கரம் குவிப்ப, வேலை என்னும்
மண்ணும் அணி முழவு அதிர, வான் அரங்கின்
நடம்புரி வாள், இரவி ஆன
கண்ணுதல் வானவன், கனகச் சடை விரிந்தால்
என, விரிந்த கதிர்கள் எல்லாம்.'' [716]

என்னும் பாடலில் சூரியோதயத்திற்குச் சிவனின் நடனத்தை உவமித்ததும், ''எயிலெரித்தவன் யானையுரித்தநாள்'' [694] என்னும் பாடலில் சிவன் திரிபுரமெரித்தது, யானைத்தோலை யுரித்தது ஆகியவற்றைக் காட்டியதும் இப்படலத்தில் சிவனைப்பற்றி உள்ள முக்கியமான குறிப்புகள். இவற்றில் பரம்பொருட்கேயுரிய தன்மைகள் இல்லை என்பது தெளிவு.

குலமுறை கிளத்து படலம்

''பிணி அரங்க வினை அகலப், பெருங்காலம் தவம் பேணி,
மணி அரங்கு அம் நெடுமுடியாய்! மலர் அயனை வழிபட்டுப்,
பணி அரங்கப் பெரும் பாயல் பரம் சுடரை யாம் காண
அணி அரங்கம் தந்தானை அறியாதார் அறியாதார்.'' [722]

என்னும் பாடலில் பிரமனிடமிருந்து ஸ்ரீரங்கநாதனை இட்சுவாகு மன்னன் பெற்று உலகினர்க்குத் தந்தான் என்று கூறும்போது, 'பரஞ்சுடர்' என்று அரங்கநகரப்பனைக் குறித்தார் கம்பநாட்டாழ்வார். கடிமணப்படலத்திலும் ''ஆதியஞ்சோதி'' [1294] என்று குறிப்பிடப்போகிறார்.

''சந்திரனை வென்றானும், உருத்திரனைச் சாய்த்தானும்,
துந்து எனும் தானவனைச் சுடு சரத்தால் துணித்தானும்
வந்த குலத்து இடைவந்த ரகு என்பான், வரி சிலையால்
இந்திரனை வென்று, திசை இருநான்கும் செரு வென்றான்.''
[731]

என்னும் பாடலில் ரகுகுலத்தரசன் ஒருவன் உருத்திரனையும் தோல்வியுறச் செய்தான் என்று பாடுகிறார். இங்கு சந்திரன், இந்திரன் என்னும் தேவர்களுக்கும், துந்து என்னும் அசுரனுக்கும் இடையேபடிக்கப்படும் உருத்திரன் தேவனான சிவனேயாகவேண்டுமேயொழிய, கழகப் பதிப்பிற்காண்பது போல் அப்பெயர்கொண்ட அரசனாகமுடியாது.

# கம்பனின் சமயம்

## கார்முகப்படலம்

சிவதனுஸ்ஸைக் கொண்டுவந்தவுடன் மிதிலை மக்கள் கூற்ருக வரும்

''சங்கொடு சக்கரம் தரித்த செங்கையச்
சிங்கவே றல்லனே விதனைத் தீண்டுவான்
எங்குள ஞெருவனின் றேற்றி னிச்சிலை
மங்கைதன் றிருமணம் வாழுமா லென்பார்'' [754]

என்னும் பாடலிலும் திருமாலே தனிப்பெருந்தெய்வம் என்றும், அத்திருமாலின் அவதாரமே இராமன் என்றும் உணர்த்துகிருன் கம்பன். 758-ம்பாடலில் ''நேமியான்'' என்றும், 791-ம்பாடலில் ''தாமரைக்கண்ணன் என்பார்.... கயல்பொருகடலுள் வைகும் கடவுளே காணுமென்பார்'' என்றும், 808-ம்பாடலில் ''அராவணை அமலனென்று அயிர்க்கும் ஆற்றலான்'' என்றும், 811-ம்பாடலில் ''தாமரைக்கண்ணினுன் என்ற தன்மையால் ஐயம் நீங்கினுள்'' என்றும், இதனையே பலகால் உணர்த்தினுன். 761—763 பாடல்களில் சிவன் தக்க யாகத்தை அழித்ததைக் கூறும் போது சிவனைக்குறித்துப் பரம்பொருளுக்குரிய அடைமொழி எதையும் இடவில்லை. 764-ம் பாடலில் ''வார்சடை அரன் நிகர் வரத! நீ அலால் யார் உளர் அறிபவர்'' என்று விச்வாமித்திரனுக்கு உவமையாக சிவனைக் கூறியதிலிருந்து, சிவனும் சிறந்த பரமாத்மஜ்ஞானியென்றும், தவச்செல்வம் மிக்கவனென்றும் உணர்த்தப்படுகிறது. இவற்றிலிருந்து கம்பனின் கடவுட்கொள்கை தெளிவுற விளங்குகிறது.

## எழுச்சிப்படலம்

''வாம்பரி விரிதிரைக் கடலை வள்ளுவன்
தேம்பொழி துழாய்முடிச் செங்கண் மாலவன்
ஆம்பரி சுலகெலா மளந்து கொண்டநாள்
சாம்புவன் றிரிந்தெனத் திரிந்து சாற்றினுன்.

என்னும் பாடலில் செங்கண்மால் எல்லா உலகையும் அளந்து கொண்ட பெருமையைப் பேசினர். 888-ம் பாடலில் "நேமி யான் பாதம் சென்னி வைத்தபின்" என்று அரசர்க்கரசனுன தசரதன் தொழும் தெய்வம் திருமாலே என்று காட்டினர்.

வெற்றி வேல் மன்னவன் 'தக்கன் வேள்வியில்
கற்றை வார் சடை முடிக் கணிச்சி வானவன்
முற்ற ஏழுலகையும் வென்ற மூரி வில்
இற்ற பேர் ஒலி கொல் அன்று இடித்தது இங்கு?' என்றான்" [820]

என்னும் பாடலில் சிவன் தக்கன் வேள்வியில் ஏழுலகில் உள்ளவரையும் வென்றமையும் காட்டப்பட்டது. இவற்றி லிருந்து திருமாலே பரம்பொருள் என்றும், சிவன் ஏழுல கங்களில் உள்ளவரினும் சக்திமிக்க ஒரு தெய்வம் என்றும் விளங்குகிறது.

வரைக்காட்சிப்படலம்

"திரண்ட தாள் நெடுஞ் செறி பணை மருது இடை ஒடியப்
புரண்டு பின் வரும் உரலொடு போனவன் போலே,
உருண்டு கால் தொடர் பிறகிடு தறியொடும் ஒருங்கே
இரண்டு மாமரம் இடை இற நடந்தது ஓர் யானை" [900]

என்னும் பாடலில் கண்ணன் மருதிடை நடந்தமையைப் பாடித் தன் கிருஷ்ணபக்தியை வெளிப்படுத்தினர்.

"மண் உற விழுந்து நெடு வான் உற எழுந்து,
கண்நுதல் பொருந்தவரு கண்ணனில் வரும்; கார்
உண்நிறம் நறும் பொடியை வீசி, ஒரு பாகம்
வெண்நிற நறும் பொடி புனைந்த மத வேழம்" [916]

என்னும் பாடலில் தன் மேனியில் ஒரு பகுதியிலே வெண் ணிறப்பொடியை கொண்டுவந்த கருநிற யானையைச் சிவனைச் தன் மேனியின் ஒருபகுதியிலே கொண்ட திருமாலுக்கு ஒப் பிடுவதன் மூலம், திருமாலின் மேனியைப் பற்றிநின்று வாழ்

பவன் சிவன் என்னும் வைஷ்ணவஸித்தாந்தத்தை விளக்கினார். "கண்ணுதல் பொருந்த வரு கண்ணன்" என்று திருமாலுக்கு ப்ராதான்யம் கொடுத்துப் பேசியிருப்பது காணத்தக்கது.

"நிலமகட்கு அணிகள் என்ன நிரை கதிர் முத்தம் சிந்தி,
மலைமகள் கொழுநன் சென்னி வந்து வீழ் கங்கை மான,
அலகில் பொன் அலம்பி ஓடிச் சாந்து சேர் அருவி மாலை,
உலகு அளந்தவன் தன் மார்பின் உத்தரீகத்தை ஒத்த"[942]

என்னும் பாடலில் திருமாலை உலகளந்தவனென்றும், (அவன் திருவடியிலிருந்து) கங்கையானது சிவனின் தலையில் வீழ்ந்ததென்றும் உணர்த்தியிருப்பது உணரத்தக்கது. திருமாலின் பரத்துவத்தைக்காட்டும் உலகளந்த விருத்தாந்தம் முதலானவற்றை இப்படி அடிக்கடி எடுத்துக்காட்டுவதுபோல் பல்லாயிரம் பாடல்களில் ஓரிடத்திலாவது சிவனுடைய பரத்துவத்தைக்காட்டும் அடிமுடிதேடியகதை முதலான பொய்ப் புராணக்கதைகளை எடுக்கவில்லை என்பது நோக்கத்தக்கது. காளிதாஸன் முதலான பண்டைக்காலத்திய சிவபக்தகவிகளும், சங்கவிலக்கியம் முதலான பண்டைத்தமிழ்நூல்களிலும் இக்கதைகள் எடுக்கப்படாததிலிருந்து, நாயன்மார்கள் காலத்தில் புனையப்பெற்ற பொய்க்கதைகளே இவை என்பது விளங்கும்.

"ஆகம் ஆலயம் ஆக உளாள் பொலிவு
ஆக, மால் அயல் நின்றெனல் ஆகுமால்;
மேக மாலை மிடைந்தன மேல் எலாம்,
ஏக மாலை கிடந்தது கீழ் எலாம்" [960]

"கண்ணுக்கு இனிது ஆகி விளங்கிய காட்சியாலும்,
எண்ணற்கு அரிது ஆகி இலங்கு சிரங்களாலும்,
வண்ணம் கொழும் சந்தனச் சேதகம் மார்பு அணிந்த
அண்ணல் கரியோன்தனை ஒத்தது அவ் ஆசு இல் குன்றம்"
[965]

என்னும் பாடல்களில். கண்ணுக்கினிதாக விளங்கும் காட்சி, எண்ணற்கரிதாகிய முடிகள். திருவோடு கூடியிருக்கை முதலான பரம்பொருள் தன்மைகளாலே தலைமைபெற்று விளங்கும் திருமாலை ஒத்திருந்தது குன்றம் என்கிறார்.

பூக்கொய்படலம்.

''மீன் உடை எயிற்றுக் கங்குல் கனகனை வெகுண்டு, வெய்ப
கான் உடைக் கதிர்கள் என்னும் ஆயிரம் கரங்கள் ஓச்சித்,
தான் உடை உதயம் என்னும் தமனியத் தறியில் நின்று.
மானுட மடங்கல் என்னத் தோன்றினன் வயங்கு வெய்
யோன்'' [975]

[பொ:-நட்சத்திரங்களாகிய பற்களையுடைய இரவாகிய இரணியனைச் சினந்து வெப்பமும் அடர்ச்சியும் உள்ள கிரணங்களான ஆயிரங்கைகளையும் மேலெழ எடுத்துத் தான் தோன்றுதற்கு இடமான உதயகிரி என்ற பொற்றூணிலிருந்து, நரசிங்கமூர்த்திபோலே. விளங்குகின்ற சூரியன் உதயமானான்.]

என்னும் முதற்பாடலிலேயே எங்கும் நிறைந்த பொருள் திருமாலே எனக்காட்டும் நரசிங்க விருத்தாந்தத்தை அனுபவித்தார். இதைப் பொறுத சைவர் புனைந்துள்ள சரபக்கதையை காவியம் முழுவதிலும் எவ்விடத்திலும் எடுக்கவில்லை.

நீர் விளையாட்டுப்படலம்

''அங்கு அவர் பண்ணை நல் நீர் ஆடுவான் அமைந்த தோற்றம்
கங்கைவார் சடையோன் அன்ன மாமுனி கனல. மேல் நாள்.
மங்கைமார் கூட்டத்தோடும், வானவர்க்கு இறைவன் செல்வம்
பொங்கு பாற்கடலிற் செல்லும் தோற்றமே போன்றது
அன்று ஏ'' [1015]

என்னும் பாடலில் கோபமே உருவெடுத்த துர்வாசமுனிவருக்கு சிவனைஉபமானமாகக் கூறியிருப்பது சிவன் கருணைக் கடலான பரம்பொருளாகமுடியாதெனக் காட்டுகிறது.

# கம்பனின் சமயம்

உண்டாட்டுப் படலம்.

"ஆறு எலாம் கங்கையே ஆய; ஆழிதாம்,
கூறு பாற்கடலையே ஒத்த; குன்று எலாம்,
ஈறு இலான் கயிலையை இயைந்த: என் இனி
வேறு யாம் புகல்வது நிலவின் வீக்கமே?" [1049]

என்னும் பாடலில் சிவனை "ஈறிலான்" [அழிவில்லாதவன்] என்று கூறியிருப்பதிலிருந்து சிவனையும் அழிவில்லாப் பரம் பொருளாகக் கருதினர் கம்பர் என்று தோன்றுகிறதே என்று சிலர் ஐயமுறக்கூடும். இக்கம்பரே பலவிடங்களில் எல்லா வுலகையும் அழித்துத் தன் திருவயிற்றிலே உண்டு விளங்கு பவன் திருமால் என்று கூறுகையாலே. அதற்கு விரோத மில்லாதபடி 'ஈறு' என்பதை ஸம்ஹாரம் என்று கொண்டு ஸம்ஹாரத்தைச் செய்பவன் என்று பொருள்கொள்வதே பொருந்தும். அல்லது ஸ்ருஷ்டிகாலத்தில் தோன்றி ஸம்ஹார காலம் முடிய வாழ்பவனுகையாலே, இவனுடைய ஆயுள் மிகுதியை நோக்கி ஈறிலான் என்று கூறியதாகவும் கொள்ள லாம். பரமவைதிகரான கம்பர் 'ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் ந ப்₃ரஹ்மா நேஶாந:" [நாராயணன் ஒருவனேயிருந் தான்; பிரனுமில்லை; சிவனுமில்லை] என்ற வேதாந்தஸித் தாந்தத்துக்கு விரோதமாகப் பேசமாட்டாரே.

"கடை உற நல் நெறி காண்கிலாதவர்க்கு
இடை உறு திரு என இந்து நந்தினன்;
படர் திரைக் கருங்கடல் பரமன் மார்பிடைச்
சுடர் மணிக்கு அரசு என இரவி தோன்றினன்" [1113]

என்னும் இப்படலத்தின் கடைசிப் பாடலிலும் 'பரமன்' என்று ஒத்தாரும் மிக்காரும் இல்லாதவனைத் திருமாலைக் கூறியிருப்பதும் நோக்கத்தக்கது. 'சுடர் மணிக்கு அரசு' என் றது ரத்தினங்களில் தலைமைபெற்றதாகிய ஸ்ரீகௌஸ்துப மணி. "ரத்நஹாரீ ச பார்தி₂வ:" என்கிறபடியே மிகச்சிறந்த

இரத்தினங்களெல்லாம் சக்கரவர்த்திக்கே உரியதாவதுபோல் மணிகளுக்கு அரசாகிய ஸ்ரீகௌஸ்துபமும் ஸர்வலோகத்துக்கும் ஒரே சக்கரவர்த்தியான கருங்கடற்பரமனுக்கே உரியதாயிற்று என்னும் கருத்து எளிதில் கிடைக்கிறது.

எதிர்கொள் படலம்.

"சூழும் மா கடல்களும் திடர் படத் துகள் பரந்து
ஏழு பாரகமும் உற்று உளது எனற்கு எளிது அரோ?
ஆழியான் உலகு அளந்த அன்று தாள் சென்ற அப்
பூழையூடே பொடித்து அப்புறம் போயதே" [1123]

என்ற பாடலில் ஸர்வேச்வரனாகிய திருமால் எல்லா உலகையும் அளந்தமையைப் பாடினார்.

"இன்ன ஆறு. இருவரும் இனிய ஆறு ஏக. அத்
துன்னும் மா நகரில் நின்று எதிர் வரத் துன்னினான்
தன்னையே அனையவன், தழலையே அனையவன்
பொன்னின் வார் சிலை இறப் புயம் நிமிர்த்தருளினான்"
[1132]

என்னும் பாடலில் 'தழலையே அனையவன்' என்று சிவனையும், 'தன்னையே அனையவன்' என்று இராமனையும் வேறுபடுத்திக் கூறியிருப்பதை நடுநிலையாளர்காணவேணும். இதைப்பொருத கழகவுரையாளர். 'தன்னையே அனையவன்' என்றதையும் சிவனுக்கு விசேஷணமாக்கினார். 'தன்னையே' 'தழலையே' என்ற ஏகாரங்கள் இங்கு சொல்லப்படுபவர் இருவர் என்று காட்டுகிறது. சிவனுடைய வில்லையும் ஒடித்தவன் தன்னையே அனையவனாக முடியுமேயொழிய ஒடிபட்ட வில்லுக்குரியவன் தன்னையே அனையவனாக முடியாதென்பது வெளிப்படை. மேலும். பலவிடங்களில் திருமாலையும். அவருடைய அவதாரமான ராமனையுமே கம்பன் 'தனக்குத்தானே ஒத்தவன்' என்றும், 'ஒத்தார் மிக்காரை இலாதவன்' என்றும் குறிப்பிடுகிறான். சிவனை ஓரிடத்திலும் அப்படிக் குறிப்பிடுவதில்லை. இதைக் கீழே

யும் காட்டினோம்; மேலேயும் காட்டுவோம். இவற்றிலிருந்து காணக்கண்கூசும் செந்நிறம், கோபம், எரிக்கும் தன்மை முதலான பரம்பொருட்குத் தகாதகுணங்களால் நெருப்பை யொத்திருப்பவன் சிவன் என்றும், இக்குணங்களுக்கு எதிர்த்தட்டான காணக்கண்குளிரும் கார்நிறம், இரக்கம், காக்கும் தன்மை முதலான பரம்பொருட்குரிய குணங்களால் தன்னையே ஒத்திருப்பவன் இராமன் என்றும் உணர்த்துகிறார் கம்பர் என்பது அறிவாளிகளுக்கு எளிதில் விளங்கும். இப்பாடலை ஒட்டியுள்ள

"காவியும் குவளையும் கடி கொள் காயாவும் ஒத்து,
ஓவியம் சுவை கெடப் பொழிவது ஓர் உருவொடே,
தேவரும் தொழு கழல் சிறுவன், முன் பிரிவது ஓர்
ஆவி வந்து என்ன வந்து, அரசன் மாடு அணுகினான்"
[1135]

என்னும் பாடலில் தழலையேயனையவனுக்கு எதிர்த்தட்டான நிறத்தையுடையவன் இராமன் என்றும், சிவன் முதலான எல்லாத்தேவர்களும் தொழும் கழலையுடையவன் இராமன் என்றும் கம்பன் பாடியிருப்பதும் நோக்கந்தக்கது. இப்படலத்திலேயே "உம்பரும் இம்பரும் உரகரும் தொழவுளான்" [1133] என்றும், "ஆதி வானவர் பிரான்" [1147] என்றும் பாடப்பெறும் இராமனுக்குத் 'தன்னையே அனையவன்' என்னும் அடைமொழி தகுமேயொழிய, 'கற்றைவார் சடையினான்' [1138] என்று தவஞ்செய்வதைக் குறிக்கும் சடைமுடியை உடையவன் என்று குறிப்பிடப் பெறும் சிவனுக்கு அவ்வடைமொழி தகாது என்று நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும்.

உலாவியற் படலம்.

"வீதி வாய்ச் செல்கின்றான் போல்,
விழித்து இமையாது நின்ற
மாதரார் கண்கள் ஊடே

வாவும் மான் தேரில் செல்வான்
யாதினும் உயர்ந்தோர் தன்னை
யாவர்க்கும் கண்ணன் என்றே
ஓதிய பெயர்க்குத் தானே
உறு பொருள் உணர்த்திவிட்டான்" [1153]

என்னும் பாடலிலும் "இவன் கண்ணனே" [1173] என்னுமிடத்திலும், திருமாலுக்குரிய கண்ணன் என்னும் பெயரால் மிகச்சிறந்த பெரியோர்கள் இராமனை உரைப்பதாகவும், அதற்குப்பொருளை இராமனே உணர்த்தியதாகவும் கூறுகிறான் கம்பன். மற்றும் பலவிடங்களிலும் இராமனைக் கண்ணனென்றே அழைக்கிறான்.

"தையல் சிற்றிடையாள் ஒரு தாழ் குழல்
உய்ய, மற்று, அவள் உள்ளத்து ஒடுங்கினன்;
வையம் முற்றும் வயிற்றின் அடக்கிய
ஐயனில் பெரியார் இனி யாவரே?" [1167]

என்னும் பாடலில் வையம் முழுவதையும் வயிற்றிலடக்கிய திருமாலே இராமன் என்றும், அவனைக்காட்டிலும் பெரியவர் எவருமேயில்லையென்றும் உத்கோஷித்தான். இப்படி எண்ணிறந்த இடங்களில் கூறியிருப்பதையொட்டி 'ஈறிலான்' [1049] என்பதை ஸம்ஹாரக்கடவுள் என்றே பொருள் கொள்ளவேண்டும் என்பது தெளிவு. "திருவின் நாயகன்" [1190] என்றவிடத்தில் லக்ஷ்மீநாதனை திருமாலே இராமன் என்று காட்டினான். திருமாலே இராமன் என்றும், திருமகளே சீதையென்றும் பலநூற்றுக்கணக்கான விடங்களில் கம்பன் காட்டியிருக்கிறான். இதை எவராலும் மறுக்கமுடியாதாகையாலேயே "சீதையைத் திருமகளாகக் கூறியதுபோன்றே இராமனையும் 'திருமாலாகவே கூறுவர்'" என்று எதிர் கொள்படலத்தின் கழக முகவுரையே கூறுகிறது. இதை மறந்து இராமன் மும்மூர்த்திகளின் அவதாரமாகக் கூறுவதாகப்பிள்ளை எழுதியதாலேயே நாம் இப்பாடல்களை ஒன்றுவிடாமல் எடுத்துக் காட்டவேண்டியுள்ளது.

# கம்பனின் சமயம்



"தோள் கண்டார் தோளே கண்டார்:
தொடு கழல் கமலம் அன்ன
தாள் கண்டார் தாளே கண்டார்
தடக் கை கண்டாரும் அஃதே:
வாள் கண்ட கண்ணர் யாரே
வடிவினை முடியக் கண்டார்?
ஊழ் கண்ட சமயத்து அன்னன்
உருவு கண்டாரை ஒத்தார்." [1116]

என்னும் பாடலில் 'ஊழ்கண்ட சமயத்து' என்று மஹா ப்ரளயகாலத்தை எடுத்து அப்போது எல்லாவுலகையும் யும் விழுங்கி விச்வரூபமெடுத்து நிற்கும் நிலையையுடைய திருமாலே இராமன் என்று உணர்த்தினர். "யோ யோ யாம் யாம் தநும்" என்கிற கீதாவாக்கியத்தையொட்டி, அவ ரவர்கர்மவினைக்குத் தக்கபடி திருமாலால் ஏற்படுத்தப்பட்ட புறச்சமயங்களில் தொழப்படும் தேவர்களெல்லாம் "ஸ ஆத்மா அங்கூாங்யங்யா தேவதா:" [நாராயணனே அனைவர்க்கும் ஆத்மாவாயிருப்பவன்; மற்ற தேவதைகளெல்லாம் அவனுடைய அவயவங்கள்] என்கிற வேதவாக்கியத்தின்படியே திருமாலுடைய ஒவ்வோரவயவங்களேயாகையாலே, அவர்களும் இராமனுடைய ஒவ்வோரவயவங்களைக் கண்டவர்களும் தம்மில் ஒப்பர் என்றார். 'அன்னன் உருவு' என்றதால் திருமாலே பரம்பொருள் என்றும், மற்ற தெய்வங்கள் அவனுடைய ஒவ்வோரவயவங்களே என்றும் காட்டிய இவ்வொரு பாசுரமே கம்பர் சைவரோ சமரசவாதியோவல்ல,பரம வைஷ்ணவர் என்று கையிலங்கு கனியாகக் காட்டித்தரும்.

### கோலங்காண் படலம்.

"கோன் அணி சங்கம் வந்து குடியிருந்தனைய கண்டத்து
ஈனம் இல் கலன்கள் தம்மில் இயைவன அணிதல் செய்தார்
மான் அணி நோக்கினர்தம் மங்கலக் கழுத்துக்கு எல்லாம்
தான் அணி ஆன போது, தனக்கு அணி யாது மாதோ?"
[1208]

என்னும் பாடலில் சங்கம் அணிந்த திருமாலே 'கோன்' [அனைவர்க்கும் தலைவன்] என்றும், மாதர் அனைவர்க்கும் திருமங்கலியமாய் விளங்கும் ஸ்ரீதேவியே சீதையென்றும் காட்டினார்.

''மொய் கொள் சீறடியைச் சேர்ந்த முளரிக்கும் செம்மை ஈந்த
தையலாள் அமிழ்ந்த மேனி, தயங்கு ஒளி தழுவிக்கொள்ள,
வெய்ய பூண் முலையில் சேர்ந்த வெண்முத்தம் சிவந்த என்றால்
செய்யரைச் சேர்ந்துளாரும், செய்யராய்த் திகழ்வர் அன்றே?''
[1210]

என்னும் பாடலில் செந்தாமரையில் இருக்கும் ஸ்ரீதேவியே சீதையென்று உணர்த்தினார். நூற்றுக்கணக்கான பாடல்களில் இப்படிப் பாடும் கம்பர் ஒருபாடலிலாவது சரஸ்வதியோ, பார்வதியோ சீதையாய் அவதரித்தாள் என்று கூறவில்லையென்பதை, மும்மூர்த்திகளும் ராமனாய் அவதரித்தனர் என்று கூறும் பிள்ளை காணவேணும்.

''சங்கு அம் கை உடைமையாலும், தாமரைக் கோயிலாலும்,
எங்கு எங்கும் பரந்து வெவ்வேறு உள்ளத்தின் எழுதிற்று என்ன
அங்கு அங்கே தோன்றலாலும், அருந்ததி அனைய கற்பின்
நங்கையும் நம்பி ஒத்தாள்; நாம் இனிப் புகல்வது என்னோ?''
[1222]

என்னும் பாடலில் இராமனை சங்கணிந்து எங்கெங்கும் பரந்து நிற்கும் பரம்பொருளான திருமால் என்றும், சீதையைத் தாமரையில் அமர்ந்த திருமகள் என்றும் குறித்திருப்பதும் நோக்கத்தக்கது.

''எங்கள் செய் தவத்தினில் இராமன் என வந்தான்,
சங்கினொடு சக்கரம் உடைத் தனி முதல் பேர்.
அங்கண் அரசு ஆதலின், அவ் அல்லி மலர் புல்லும்
மங்கை இவள் ஆம்' என வசிட்டன் மகிழ்வு உற்றான்'' [1233]

என்னும் பாடலில் இராமன் சங்கசக்கரங்களை தரித்த ஒப்பற்ற முதற்கடவுளும், புண்டரீகாக்ஷனும், எல்லோர்க்கும் இறைவனுமான திருமாலே என்றும், தாமரையாளான திருமகளே சீதையென்றும் பரமஞானியான வசிஷ்டன் எண்ணினான்

என்றார். இவ்வொருபாடலே கம்பனின் சமயத்தை வெளிப்படுத்தப் போதுமானது.

''நைவளம் நவிற்றும் மொழி நண்ண வரலோடும்,
வையம் நுகர் கொற்றவனும் மாதவரும் அல்லார்,
கைகள் தலை புக்கன, கருத்து உளதும் எல்லாம்
தெய்வம் எனல் உற்ற, உடல் சிந்தை வசம் அன்றே'' [1235]

''மாதவனை முன் கொள வணங்கி, நெடு மன்னன்
பாத மலரைத் தொழுது, கண்கள் பனி சோரும்
தாதை அருகு இட்ட தவிசில் தனி இருந்தாள்,
போதினை வெறுத்து அரசர் பொன்மனை புகுந்தாள்'' [1236]

''அச்சு என நினைத்த முதல் அந்தணன் நினைந்தான்
'பச்சை மலை ஒத்த படிவத்து அடல் இராமன்,
நச்சு உடை வடிக் கண் மலர் நங்கை இவள் என்றால்,
இச் சிலை கிடக்க, மலை ஏழையும் இருந்தே!'' [1237]

என்னும் பாடல்களில், இராமனை உலகனைத்தையும் உண்ட திருமாலாகவும், சீதையைத் தாமரையாளான திருமகளாகவும் கோஷித்தார். ''வெள்ளத்தின் சடிலத்தான்'' *[1207]* என்று இப்படலத்தில் ஒரே இடத்தில் சிவனைக் குறிப்பிட்டார். திருமாலுடைய ஸ்ரீபாததீர்த்தமாகக் கம்பரே சிலவிடங்களில் குறிப்பிடும் கங்கையைத் தலையில் அணிந்தவன் என்பது இதன் பொருள். சிவனைத் திருமாலின் அடியானாகக் கருதினாரேயொழியப் பரம்பொருளாகக் கருதவில்லை கம்பர் என்று இதிலிருந்து விளங்குகிறது.

## கடிமணப் படலம்.

''வானவர் பெருமான்'' *[1263]* என்று இராமனைக் குறிப்பிட்டுவிட்டு, அடுத்தவொரு பாடலில் ''அஞ்சனவொளியானும் அலர்மிசை உறைவாளும்'' *[1265]* என்று ஸீதாராமர்களிருவரும் லக்ஷ்மீநாராயணர்களே என்று காட்டினான்.

''எண் தவ முனிவரும் இறைவர் யாவரும்
அண்டரும் பிறரும் புக்கு அடங்கிற்று; ஆதலின்,

மண்டபம், வையமும் வானும் வாய்மடுத்து
உண்டவன் மணி அணி உதரம் ஒத்ததே." [1290]

என்னும் பாடலில் எல்லா தேவர்களும் எல்லா உலகங்களும் அடங்கிய திருவயிற்றை உடையவன் திருமால் என்று காட்டினார். அடுத்த பாடலில் "அரவணைத் துறந்துபோந்து அயோத்தி எய்திய இராகவன்" [1291] என்று இராமன் திருமாலே என்றார்.

"என்றும் நான்முகன் முதல் யாரும் யாவையும்
நின்ற பேர் இருளினை நீக்கி நீள் நெறி
சென்று மீளாக் குறி சேரச் சேர்த்திடு
தன் திரு நாமத்தைத் தானும் சாத்தியே" [1293]

என்னும் பாடலில் இராமன் திருமண் தரித்தான் என்று பாடுகிறான் கம்பன். நான்முகன் முதலாக எல்லா ஜீவர்களுக்கும் அஞ்ஞானத்தை நீக்கி முக்திநெறியைச் சேரவைப்பது ஊர்த்₄வபுண்ட்₃ரம் என்று பாடுவதிலிருந்து கம்பன் திருமண்தரித்த பரமவைஷ்ணவன் என்று விளங்குகிறது. அஞ்ஞானமுடைய பிரமன் பரம்பொருளாகமுடியாதென்பதும், இராமனை அவதரித்திருக்கமுடியாதென்றும் விளங்குகிறது. பிரமனின் பிள்ளையான சிவனுக்கும் இதே நியாயம் பொருந்தும். "இதனால், நான்முகன் முதலாக உள்ள ஆன்மகோடிகளும், ஏனைச் சராசரங்களும் அவிச்சை நீங்கி முடிவில் முக்திபெறுவதற்குத் திருமண் காப்புத் தரித்தல் இன்றியமையாததென்பதும் பெறப்படும். நீள்நெறி–அர்ச்சிராதி மார்க்கம். மீளாக்குறி–மீண்டு வருதலில்லாத முக்திநிலை. திருநாமம்–திருமாலின் பன்னிரு திருநாமங்களையும் கூறிப் பன்னிரண்டுறுப்புக்களில் அணிந்து கொள்ளும் ஊர்த்துவபுண்டரம். "ஈராறு நாமம் உரைசெய்து மண்கொடிடுவார்கள் காணும் இமையோர்" (வில்லிபாரதம், 9-ஆம்போர் 1) என்றார் பின்னேரும். 'சூனிய நெற்றியோடு எந்தச் சுபகாரியமும் செய்யலாகாது' என்பது விதியாதலின், 'மங்களஸ்நானம்' செய்தபின் திருநாமந்தரித்தல் கூறப்பட்டது." என்னும் கழகக்குறிப்புரையும் கம்பன் பரமவைஷ்ணவசிகாமணியென்று விளக்குகிறது.

# கம்பனின் சமயம்



அடுத்த பாடலில் "ஆதியஞ்சோதி" [1294] என்று அரங்கநகரப்பனைக் குறிப்பிடுகிற கம்பன் அடுத்துள்ள பாடலொன்றில் "கார்விடக் களம் உடைக் கணிச்சி வானவன் வார்சடைப்புடையின்" [1298] என்று நீலகண்டனை சிவனை சடைதரித்த தபஸ்வியாகக் குறிப்பிடுவதும் குறிக்கொள்ளத்தக்கது.

கோவை இன் பெரு வட முத்தம் கோத்தன
காவல் செய் தடக் கையின் நடுவண் காந்துவ
மூவகை உலகுக்கும் முதல்வன் நாம் என
ஏவரும் பெரும் குறி இட்ட போன்றவே. [1301]

என்னும் பாடலில் இராமனை எல்லா உலகிற்கும் தலைவனாகக் குறிப்பிட்டு. அடுத்துவரும் பாடலொன்றில் "தேனுடை மலர்மகள் திளைக்கும் மார்பினில்" [1303] என்று இவ்விராமன் திருமகள் நாயகனான திருமாலே என்று உணர்த்துகிறான்.

மேவு அரும் சுடர் என விளங்கும் மார்பின் நூல்
ஏவரும் தெரிந்து இனிது உணர்மின் ஈண்டு எனத்
தேவரும் முனிவரும் தெரிக்கலா முதல்
மூவரும் தான் என முடித்தது ஒத்ததே. [1305]

என்னும் பாடலில் மும்மூர்த்திகளும் இராமனே என்று கம்பன் கூறுகிறானே எனில்: இக்கம்பனே அடுத்துள்ளதொரு பாடலில் "முப்பரம் பொருளிற்குள் முதலை" [1313] என்று மும்மூர்த்திகளுக்குள் முதல்வனான திருமாலே இவன் என்று கூறுகையாலும். சாஸ்திரங்களெல்லாம் பிரமன் சிவன் முதலான எல்லாச்சேதனர்களிலும் அசேதனப் பொருள்களிலும் உள்ளும் புறமும் வியாபித்திருக்கையாலே எல்லாப்பொருள்களும் நாராயணனே என்று கூறுகை

யாலும். இதுகொண்டு மும்மூர்த்திகளின் அவதாரம் இராமன் எனக்கூறமுடியாது. "சூலமும் திகிரிசங்கும்" என்னும் பாடலும் இதுபோலவே ப்ரஹ்மருத்ரர்களுக்கும் அந்தர்யாமியாய். அவர்களுடைய ஆயுதங்களையும் இருப்பிடத்தையும், தன் ஆயுதங்களாகவும் இருப்பிடமாகவும் உடையவனுயுள்ள திருமாலே சூலம், திகிரி. சங்கு முதலான தன் ஆயுதங்களையும். ஆலம் மலர், கயிலை முதலான தன் இருப்பிடங்களையும் விட்டு இராமனுய் அவதரித்தான் என்னும் கருத்தைக்கூறுவதாகும். இப்படிக் கொள்ளாவிடில் ஆயிரக்கணக்கான பாடல்களில் இராமனைத் திருமாலின் அவதாரமாகவும். சீதையைத் திருமகளின் அவதாரமாகவும். பிரமருத்திரர்களைத் திருமாலைவிடத் தாழ்ந்தவர்களாய். அவனுல் படைத்து அளித்து அழிக்கப்படும் ஜீவர்களாகவும் கம்பனே காட்டியிருப்பது பொருந்தாமற்போய்விடும்.

சுற்றும் நீள் தமனியச் சோதி பொங்க. மேல்
ஒற்றை மா மணி உமிழ் உதர பந்தனம்,
மற்றும் ஓர் அண்டமும் அயனும் வந்து எழப்
பொன் தடம் தாமரை பூத்த போன்றதே. [1306]

என்னும் அடுத்த பாடலிலேயே கம்பன் அண்டத்தோடு கூடிய அயனைப்படைத்த திருமாலே இராமபிரான் என்று காட்டுவதையும்.

இனிப் பரந்து உலகினை அளப்பது எங்கு? எனத்
தனித்தனி தடுப்பன போலும் சால்பின
நுனிப்பு அரும் நுண் வினைச் சிலம்பு நோன் கழல்
பணிப்பு அரும் தாமரைப் பாதம் பற்றவே. [1311]

இன்னணம் ஒளிர்தர இமையவர்க்கு எலாம்
தன்னையே அனையது ஓர் கோலம் தாங்கினுன்
பன்னக மணி விளக்கு அழலும் பாயலுள்
அன்னவர் தவத்தினுல் அனந்தல் நீங்கினுன். [1312]

என்னும் பாடல்களில் உலகளந்த திரிவிக்கிரமனுகவும், திருப்பாற்கடலில் அநந்தன்மேல் கண்வளர்கின்றவனுகவு முள்ள திருமாலே இராமன் என்று பறைசாற்றுவதையும் குறிக்கொள்வது.

முப் பரம் பொருளிற்குள் முதலே மூலத்தை
இப் பரம் துடைத்தவர் எய்தும் இன்பத்தை
அப்பனை அப்பினுள் அமுதம் தன்னையே
ஒப்பனை ஒப்பனை உரைக்க ஒண்ணுமோ. [1313]

என்னும் பாடலில் மும்மூர்த்திகளுக்குள் முதல்வன் திருமால் என்று கோஷிக்கையாலே, கம்பன் திரிமூர்த்தி சாம்யத்தையோ, ஐக்யத்தையோ கனவிலும் கருதியதில்லை என்று விளங்குகிறது. அடுத்துள்ள பாடல் ஒன்றில் "அலைகடல் பிறந்து" *[1324]* என்று பாற்கடலிற்பிறந்த ஸ்ரீதேவியே சீதை என்று குறிப்பிட்டு, அடுத்துள்ள பாடல்களில்

நன்றி வானவர் எலாம் இருந்த நம்பியைத்
துன்று இரும் கருங் கடல் துவைப்பத் தோன்றிய
மன்றல் அம் கோதையாள் மாலே சூட்டிய
அன்றினும் இன்று உடைத்து அழகு என்றார் அரோ.
[1325]

இந்திரன் சசியொடும் எய்தினுன், இளம்
சந்திரமௌலியும் தையலாளுடன்
வந்தனன், மலர் அயன் வாக்கினுளுடன்
அந்தரம் புகுந்தனன், அழகு காணவே. *[1327]*

என்று அன்று திருப்பாற்கடலேக் கடைந்தபோது தோன்றிய திருமகள் திருமாலே மாலேசூட்டியதைக்கண்ட பிரமன், உருத்திரன் முதலான தேவர்களே, இன்று அவர்களே சீதாராமர்களாய் அவதரித்து மாலேசூட்டிக் கொள்வதைக் கண்டு அதனினும் இன்புற்றனர் என்று கூறுகிருன் கம்பன். இவையெல்லாம் பிரமனும் உருத்திரனும் இராமனுக அவ

தரித்ததாகக் கூறுவது சிறிதும் ஒட்டாது என்று காட்டு கிறது. "இந்திரன் சசியொடும்" [1327] என்னும் பாடலின் கழகக்குறிப்புரையில் "இந்திரன் விதி சிவன் என்ற மூவரும் தாமே சென்று அவதாரவரம் வேண்டியவர் என்ற முன்செய்தி இங்கு நினைப்பிடத்தகும்" என்று எழுதியிருக்கிறார் கழகவுரை யாளர். திருவவதாரப்படலத்தில் பிள்ளையவர்கள் சிவன் சென்று அவதாரவரம் வேண்டவில்லையென்று காட்டுவதற் காகப் பல பாடல்களைத் திருத்தியதை கடிமணப் படலத்தின் உரையாளர் ஏற்றுக்கொள்ளவில்லை என்று விளங்குகிறது. இப்படி முன்னுக்குப்பின் முரணுக உரைகள் அமைந்திருப் பது கழகப்பதிப்புக்குப்பெருமை தருமா என்பதை அண்ணு மலைப் பல்கலைக்கழக நிர்வாகிகள் ஆலோசிக்கவேணும். மற்ற கழகவுரையாளர்களைக் கலந்துகொள்ளாமல், கம்பன் கருத்துக்கு நேர்முரணுகப் பிள்ளை திருத்தியிருக்கும் திருவவ தாரப்படலப்பாடல்களை அடுத்த பதிப்பிலாவது சரி செய் தால்தான் இந்த முரண்பாடுகள் நீங்கும். நிற்க;

நூல் கடல் அன்னவர் சொல் கடன் நோக்கி
மால் கடல் அன்ன மனத்தவளோடும்
கால் கடல் போல் கருணைக் கடல் பண்டைப்
பால் கடல் அன்னது ஒர் பாயல் அணைந்தான். [1343]

பங்குனி உத்தரம் ஆன பகல் போது
அங்கண் இருக்கினில் ஆயிரம் நாமச்
சிங்கம் மணத் தொழில் செய்த திறத்தால்
மங்கல அங்கி வசிட்டன் வளர்த்தான். [1344]

என்னும் ஸீதாகல்யாணப் பாடல்களிலும் இந்த தம்பதிகள் பாற்கடலில் பள்ளிகொண்டவர்களே என்றும், "தே₃வோ நாமஸஹஸ்ரவாந்" "பேராயிரம் கொண்டதோர் பீடுடையன் நாராயணன்" என்று புகழப்படும் நாராயணனே இராம னுகத்திருவவதரித்தவன் என்றும் உத்கோஷித்தான் கம்பன்.

# கம்பனின் சமயம்



பாழிப் புயம் உயர் திக்கு இடை அடையப் புடை படர் அச்
சூழிச் சடை முடி விண் தொட, அயல் வெண்மதி தோற்ற,
ஆழிப் புனல் எரி கால் நிலம் ஆகாயமும் அழியும்
ஊழிக் கடை முடிவில் திரி உமை கேள்வனே ஒப்ப. [1359]

என்னும் பாடலில் சிவன் ஊழிகாலத்தில் நடம்புரிந்து வருவதுபோல் கடுங்கோபத்துடன் பரசுராமன் வந்தான் என்கிறார். இதனால் சிவன் செய்யும் ஸம்ஹாரம் தமோ குணத்தால் ஏற்படும் கோபத்தால் என்று உணர்த்தப் படுகிறது. ஸர்வேச்வரனான நாராயணன் ஸம்ஹாரம் செய்வது கருணையால் ஆகும். "ஆழிப்புனல் எரிகால் நிலம் ஆகாயமும் அழியும் ஊழிக்கடை" என்கையாலே பிரமனால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட பஞ்சபூதங்களாலான அண்டத்தின் உள்ளிருப்பவையான வ்யஷ்டிப்பொருள்களே இவனால் அழிக்கப்படுகின்றன என்று உணர்த்தப்படுகிறது. ப்ரக்ருதியிலிருந்து மஹான், அதிலிருந்து அஹங்காரம் என்னும் ரீதியிலே ஏற்படும் அண்டத்திற்கு முற்பட்ட ஸமஷ்டி ஸ்ருஷ்டியும், எல்லாப்பொருள்களும் மூலப்ரக்ருதியை சரீரமாகக்கொண்ட தன்னில் அடங்கும் ஸமஷ்டி ஸம்ஹாரமும் நாராயணனாலேயே செய்யப்படுகின்றனவன்றோ. "ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் ந ப்³ரஹ்மா நேஶாந:" [மஹோபனிஷத்] என்று உபனிஷத்தும் பிரமருத்திரர்களையும் ஸம்ஹரித்துத் தனியேயிருப்பவன் நாராயணனே என்று ஓதிற்றன்றோ. கம்பரும் மற்றும் பல பாடல்களில் எல்லாவுலகங்களையும் தன்னுள் அடக்குகிறான் நாராயணன் என்று காட்டியிருக்கிறார் என்பதை முன்னும் கண்டோம்; பின்னும் காண்போம்.

ஒன்றினை உமையாள் கேள்வன்
உவந்தனன்; மற்றை ஒன்றை,

நின்று உலகு அளந்த நேமி
  நெடிய மால் நெறியில் கொண்டான்;
என்று இஃது உணர்ந்த விண்ணேர்.
  'இரண்டினும் வன்மை எய்தும்
வென்றியது யாவது?' என்று.
  விரிஞ்சனை வினவ அந்நாள்.'' [1375]

என்னும் பாடலில் சிவனை ''உமையாள் கேள்வன்'' என்று மாத்திரம் சொல்லி. விஷ்ணுவை ''நின்று உலகு அளந்த நேமி நெடிய மால்'' என்று பரக்வம் தோற்றச் சொல்லியிருப்பதைக் காணவேணும். 'இரண்டு விற்களிலும் எது வெற்றியை உடையது' என்று தேவர்கள் கேட்டது, ருத்ர விஷ்ணுக்களில் யார் வலிமைமிக்கவர்கள்' என்னும் கருத்திலேயே என்பதை ''சிரிது தேவர் தங்கள் சிந்தனை!'' என்னும் அடுத்த பாடலின் முதலடியாலே விளங்குகிறது. ''ஶிதி கண்டஸ்ய விஷ்ணோச்ச பலாபல நிரீக்ஷயா'' [ரா-பா 75-17] [சிவவிஷ்ணுக்களின் பலாபலங்களைக் காணவிரும்பி]என்று வால்மீகியால் இது தெளிவாகவே கூறப்பட்டது. ''வென்றியர் யாவர்'' என்றும் பாடம் காண்கிறது.

''சிரிது தேவர் தங்கள் சிந்தனை!' என்பது உன்னி,
வேரி அம் கமலத் தோனும் இயைவது ஓர் விநயம் தன்னுல்.
யாரினும் உயர்ந்த மூலத்து ஒருவராம் இருவர் தம்மை.
முரி வெம் சிலை மேல் இட்டு மொய் அமர் மூட்டி விட்டான்.''
[1376]

என்னும் பாடலில் சிவவிஷ்ணுக்களை ''யாரினும் உயர்ந்த மூலத்தொருவராம் இருவர்தம்மை'' என்று ஒருவராகக் கூறியிருப்பதைக்கண்டு இருவருக்கும் ஸ்வரூபைக்யம் கூறப்படுவதாகத்தாமும் கலங்கி. பிறரையும் கலக்கும் சில வாக்கியங்களைக் கழகக்குறிப்புரையாளர் குறிப்புரையில் எழுதியுள்ளார். மஹாமஹோபாத்தியாய உ.வே. சாமிநாதய்யர் நூல் நிலையப்பதிப்பில் 'யாரினுமுயர்ந்த மூலத் தேவராம் இருவர் தம்மை'' என்னும் பாடம் ஆதரிக்கப்பட்டுள்ளது.

''முதலாவார் மூவர்'' என்னும் ஆழ்வார் பாசுரத்தை ஒட்டி யிருப்பது இப்பாடம். பலவிடங்களில் சிவனை விஷ்ணு வைக்காட்டிலும் தாழ்ந்தவனாக கோஷிக்கும் கம்பன் கருத் துக்கும் இப்பாடமே பொருந்தியது. ''மூலந்தொருவராம்'' என்றே பாடமானாலும், கம்பனுடைய மற்ற பாடல்களைக் கருத்தில் கொண்டு காணும்போது சிவன் சரீரமாகவும் கார்யமாகவும், நாராயணன் ஆத்மாவாகவும் காரணமாகவு மிருப்பதைக்கொண்டே இருவரையும் காரணநிலையில் ஒருவ ராகவும் கார்யநிலையில் இருவராகவும் குறிப்பிட்டான் கம் பன் என்பது விளங்கும். கழகப்பொழிப்புரையிலும் ''யாரி னும் மேம்பட்ட காரணநிலையில் ஒருவராய்க்காரியநிலையில் இருவரானவர்களை'' என்றே பொருள் உரைக்கப்பட்டது. இதில் எவர்க்கும் விவாதமில்லை. குறிப்புரையில் சிவவிஷ் ணுக்களுக்கு ஸ்வரூபைக்யத்தைக் கம்பன்கருதியது போலும், ஆழ்வார்களும் இதை ஆதரித்திருப்பதுபோலும் எழுதி யிருப்பது நடுநிலையாளர்களால் ஏற்கத்தகாதது என்பதை நிரூபிப்போம் இனி.

''யாரினும் உயர்ந்த மூலத்தொருவரா மிருவர் என்றது, காப்புத் தொழிலையும் அழித்தலையும் புரியும் திருமாலும் சிவபிரானும் தொழில் வேற்றுமையால் இருவரேனும், இருவரும் ஒருவர் என்று அறிவித் தற்கு என்றுணர்க. ''அரன் நாரணன் நாமம் ஆன்விடை புள்ளூர்தி, உரை நூல் மறையுறையும் கோயில் வரை நீர், கரும மழிப்பளிப்புக் கையது வேல் நேமி, உருவமெரி கார்மேனி யொன்று'' (பொய்கை- அந்தாதி. 5): ''ஏற்றான் புள்ளூர்ந்தா னெயிலெரித்தான் மார்விடந் தான், நீற்றான் நிழல்மணி வண்ணத்தான் – கூற்றொருபால் மங்கை யான், பூமகளான், வார்சடையான் நீள் முடியான் கங்கையான் நீள்கழலான் காப்பு'' (ஷை 74); ''பொன்திகழுமேனிப் புரிசடையெம் புண்ணியனும் நின்றுலகம் தாய நெடுமாலும், என்றும், இருவரங் கத்தால் திரிவரேலும் ஒருவன், ஒருவனங்கத்தென்று முளன்'' (ஷை 99); ''தாழ்சடையும் நீண் முடியுமொண்மழுவும் சக்கரமும், சூழரவும் பொன்னாணும் தோன்றுமால்–சூழும், திரண்டருவி பாயும் திருமலைமே லெந்தைக்கு, இரண்டுருவு மொன்றா யிசைந்து'' (பூதத். அந்தாதி. 63) முதலிய ஆழ்வார்கள் அருளிச்செயல்களைக் கொண்டு இவ்வொற்றுமையுணர்க.''என்பது இப்பாடலின்கீழ்எழுதப்பட்டுள்ள

கழகக் குறிப்புரை. இதில் "நாழ்சடையும்" என்னும் பாசுரத்தை பூதத்தாழ்வாருடையதாகக் குறித்திருப்பது பிழை: அது மூன்றாமவரான பேயாழ்வாருடையது.

முதலில் பொய்கையாழ்வார் பூதத்தாழ்வார் பேயாழ்வார் முதலான ஆழ்வார்கள் சிவ விஷ்ணுக்களுக்கு ஸ்வரூபைக்யத்தைக் கருதியதாக எழுதியிருப்பது தகாது என்று விளக்குவோம். "அரன் நாரணன்" என்னும் பாசுரத்தில் சிவனுக்கும் நாராயணனுக்கும் பெயர், வாஹனம், சாஸ்திரம் இருப்பிடம், காரியம், ஆயுதம், உருவம் ஆகியவற்றில் மிகவும் வேற்றுமை உள்ளதென்று கூறப்படுகின்றது. சிவனுடைய பெயர் முதலானவை அவன் ஜீவனென்று காட்டித்தருகின்றன என்றும், நாராயணனுடைய பெயர் முதலானவை அவன் பரம்பொருள் என்று காட்டித்தருகின்றன என்றும் உணர்த்தப்படுகிறது. இதன் விளக்கத்தைப் பூர்வாசார்ய வ்யாக்யானங்களிலும் நம்முடைய திருவந்தாதி வ்யாக்யானத்திலும் விரிவாகக் காணலாம். சிவனை பரம்பொருளாகச் சொல்லுவது சிலரால் நூற்கப்பட்ட நூல் (ஆகமங்களும் தாமஸபுராணங்களும்) என்றும், நாராயணனைப் பரம்பொருளாகச் சொல்லுவது ஒருவராலும் இயற்றப்படாத மறை (வேதம்) என்றும் கூறியிருப்பதிலிருந்து சிவன் ஜீவனென்றும், நாராயணன் பரமாத்மாவென்றும் நிரூபிப்பதற்காகவே இப்பாசுரத்தை ஆழ்வார் அருளியிருக்கிறார் என்று விளங்குகிறது. ஆகையால் 'மேனி ஒன்று' என்றதற்கு சிவன் நாராயணனுக்கு சரீரமாயிருக்கிறான் என்றே பொருள் கொள்ளவேண்டும். இருவரும் ஒரே சரீரத்தை உடையவர்கள் என்று கொண்டாலும் ஒரு கால விசேஷத்தில் இருவரும் ஒரே சரீரத்தை உடையராயிருந்தமையைக் குறிப்பிடுமேயொழிய, இருவரும் ஒன்றென்று ஆகிவிட்டது. லக்ஷ்மீதேவியானவள் நாராயணனின் சரீரத்தில் ஒன்றுபட்டிருப்பதால் இருவரும் ஒன்றென்று ஆகிவிடாது. என்றும் திருமேனியிலுள்ள ஸ்ரீதேவிக்கே அப்படியாகாதபோது, ஏதோவொரு காலத்தில் திருமேனியில் இடம்பெற்ற சிவன் நாரணனோடு ஒன்றாகமுடியாது.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்

சோதி-16] [ஒளி-10

# கம்பனின் சமயம்



இதிலிருந்து "தாழ்சடையும்" என்னும் பாசுரத்தில் பேயாழ்வார் இரண்டுருவும் ஒன்ருயிசைந்திருப்பதாகப் பாடியிருப்பதிலிருந்தும் ஸ்வரூபைக்யம் ஸித்திக்காது என விளங்கும். 'பொன்திகழும்மேனி' பாசுரத்தில் "புரிசடையம் புண்ணியன்" என்றதால் சிவனை சடைதரித்துத்தவம் செய்யும் ஜீவன் என்றுகாட்டி, "உலகம் தாய நெடுமால்" என்றதால் திருமாலைப் பரம்பொருளாகக் காட்டியபடியால், "ஒருவன் ஒருவனங்கத்து என்றுமுளன்" என்றதற்கு சிவன் திருமாலின் சரீரமாகவே என்றும் இருக்கிருன் எனப் பொருள் கொள்வதே பொருந்தும். "சிவன் திருமாலின் திருமேனியிலே இருக்கிருன்" என்று கொண்டாலும் குறையில்லை. எப்படியும் இப்பாசுரத்தில் சிவவிஷ்ணுக்களின் ஸ்வரூபைக்யம் ஸித்திக்காது. 'ஏற்ருன்' முதலான பதங்களால் சொல்லப்பட்ட சிவன், 'புள்ளூர்ந்தான்' முதலான பதங்களால் சொல்லப்பட்ட திருமாலுக்கு 'காப்பு' எனப்படும் காக்கப்படும் பொருளாயிருப்பவன் என்றே காட்டுகிருராகையால் 'ஏற்ருன்' பாசுரத்திலும் ஸ்வரூபைக்யம் ஸித்திக்காது. இப்பாசுரங்களில் ஸ்வரூபைக்யத்தை நலிந்து கொள்ளப் பார்த்தால் "முதலாவார் மூவர் அம்மூவருள்ளும் முதலாவான் மூரிநீர் வண்ணன்" (முதல் திருவ 15) "மாமதிள் முன்றெய்த இறையான் நின் ஆகத்து இறை" (ஷ 28) "திருமாலை யல்லது தெய்வமென்றேத்தேன்"

[இடி-64] "கண்ணுதலோனன்றே தொழுந்தகையார்" [இரதிருவ-12] "பிறை யிருந்த செஞ்சடையான்......மாலைக் குறையிரந்து" [இடி-17] "எரியுருவத்தேறேறி பட்ட விடு சாபம்......சொல்லின்கதை" [இடி-63] "மாகடல் நஞ் சுண்டான் தனக்கும் இறையாவான் எங்கள் பிரான்" [இடி-96] "மாமலரோன் வார்சடையான் என்றிவர் கட்கு எண்ணத்தாளுமோ இமை" [மூன்திருவ-97] என்று முதலாழ்வார்கள் மூவருமே சிவனைப் பலதாழ்வுகளையுடைய ஜீவனாகவும், திருமாலைப் பரம்பொருளாகவும் பேசியிருப் பது விரோதிக்கும். இப்படி ஆழ்வார்கள் பேசியிருப்பது போலவே கம்பனும் திருமாலின் பரத்துவத்தையும், சிவ னின் அபரத்துவத்தையும் பேசியிருப்பதைக் காட்டிவரு கிறேனாகையால், ஆழ்வார்கள் பாசுரங்களிற்போலவே கம்பன் சில பாடல்களில் சிவனுக்கும் எல்லாச் சேதநாசேத னங்களுக்குமே நாராயணனோடு ஐக்யம் சொல்லியிருப்பது நாராயணன் அனைவருக்கும் ஆத்மாவாகவும், சிவன் முதலான சேதனரும், அசேதனப்பொருள்களும் அவனுக்கு சரீர மாகவுமிருப்பதாலேயே என்று கொள்வதே பொருந்தும். இல்லாவிடில் அசேதனப் பொருள்களுக்கும் நாராயணனோடு ஐக்யம் சொல்லவேண்டிவரும். ஆகையால் கழகக்குறிப்புரை யாளர் இங்கு எழுதிய வார்த்தைகள் நடுநிலைதவறியவை என்று நிரூபிக்கப்பட்டது. முன் பாட்டில் "உமையாள் கேள்வன்" என்று சிவனைச்சொல்லி, "நின்று உலகளந்த நேமி நெடியமால்" என்று திருமாலைக் குறிப்பதன் மூலம் திருமாலின் பெருமையைக் காட்டிய கம்பன் அடுத்த பாடல்களிலும்

'இருவரும் இரண்டு வில்லும் ஏற்றினர், உலகம் ஏழும்
வெருவரத், திசைகள் பேர, வெம் கனல் பொங்க, மேல்மேல்
செரு மலைகின்ற போழ்தில், திரிபுரம் எரித்த தேவன்,
வரிசிலை இற்றது ஆக, மற்றவன் முனிந்து மன்னோ.'

[1377]

'மீட்டும் போர் தொடங்கும் வேலே
விண்ணவர் விலக்க, வல் வில்
நீட்டினன் தேவர்கோன் கை
நெற்றியில் கண்ணன்; வெற்றி
காட்டிய கரிய மாலும்,
கார்முகம் அதனைப் பாரில்
ஈட்டிய தவத்தின் மிக்க
இரிசிகற்கு ஈந்து போனான்.' [1378]

என்று திருமால் முனிந்ததினுல் சிவன் வில் முரிந்தது என்றும் திருமால் சிவனை வெற்றிகொண்டான் என்றும் பாடியிருப்பதிலிருந்தும் சிவனிலும் சிறந்தவன் திருமால் என்பதே கம்பன் கருத்து என்று விளங்குகிறது. "திரிபுரம் எரித்த தேவன்" என்றதற்கு எதிர்த்தட்டாக, 'மற்றவன்' என்று கம்பன் திருமாலைக் குறித்திருக்க, அப்பதத்தை 'மற்று அவன்' என்று பிரித்து அச்சிட்டு, 'பின்பு அச்சிவபிரான்' என்று பொருள் உரைத்திருப்பது கழக உரையாளரின் பக்ஷபாதத்தைக்காட்டுகிறது. 'மற்றவன்' என்னும் பதத்திற்குத் 'திருமால்' என்று பொருள் கொள்வதே 'வெற்றி காட்டிய கரியமால்' என்னும் அடுத்த பாட்டின் பகுதிக்கும், மூலமான வால்மீகி ராமாயணத்திற்கும் பொருந்தும். அடுத்துள்ள பாடல் ஒன்றிலும் "நாரணன் வலியின் ஆண்ட வென்றி வில்" என்று கம்பன் குறித்திருப்பதும் உணரத்தக்கது.

'நீதியாய்! முனிந்திடேல்; நீ இங்கு யாவர்க்கும்
ஆதி, யான் அறிந்தனென், அலங்கல் நேமியாய்!
வேதியா! இறுவதே அன்றி, வெண் மதிப்
பாதியான் பிடித்த வில் பற்றப் போதுமோ?; [1385]

என்னும் பாடலில் "அலங்கல் நேமியாய்" என்று இராமன் திருத்துழாய் மாலையணிந்த சக்ரதாரியே எனக்காட்டி அவனே அனைவர்க்கும் ஆதி என்று கோஷிப்பதன்மூலம் விஷ்ணு பரத்துவ நிர்ணயம் செய்தான் கம்பன். "வெண் மதிப்பாதியான் பிடித்த வில் பற்றப் போதுமோ" என்ற

தால் திருமாலைக்காட்டிலும் சிவன் மிகவும் தாழ்ந்தவன் என்றும் காட்டினான். இக்கம்பனையா சமரசவாதியென்பது?

'பொன் உடை வனை கழல். பொலம் கொள் தோளினாய்!
மின் உடை நேமியான் ஆதல் மெய்ம்மையால்,
என் உளது உலகினுக்கு இடுக்கண்? யான் தந்த
உன்னுடை வில்லும் உன் உரத்துக்கு ஈடு அன்று ஆல்.'

[1386]

என்னும் அடுத்தபாடலில் பரசுராமன் இராமனைத் திருமாலே யென்றும். திருமாலின் வில்லை அவனுடைய வில்லென்று குறிப்பிட்டதிலிருந்து இராமன் மும்மூர்த்திகளின் அவதாரம் என்னும் கூற்று கம்பனால் கணிசிக்கவும் படாதது என்று விளங்குகிறது.

"'எண்ணிய பொருள் எலாம் இனிது முற்றுக!
மண்ணிய மணி நிற வண்ண! வண் துழாய்க்
கண்ணிய! யாவர்க்கும் களைகண் ஆகிய,
புண்ணிய! விடை' எனத் தொழுது போயினான்."

[1388]

என்னும் பாடலிலும் பரசுராமன் வண்டுழாய்க் கண்ணியனான திருமாலே இராமனென்றும், அவனே அனைவருடைய துன்பங்களையும் துடைக்கும் துணைவன் என்றும் பாடியதும் காணத்தக்கது.

"'பொய்ம்மை இல் சிறுமையில் புரிந்த ஆண் தொழில்,
மும்மையின் உலகினால் முடிக்கல் ஆவதோ?
மெய்ம்மை இச் சிறுவனே. வினை செய்தோர்களுக்கு
இம்மையும் மறுமையும் ஈயும்!' என்றனன்"

[1392]

என்னும் பாடலில் தசரதன் வாயிலாகவும் இராமனே இம்மையும் மறுமையும் கொடுக்கும் திருமால் என்று உணர்த்துகிறான் கம்பன்.

பரசுராமப் படலம் முற்றிற்று

பாலகாண்டம் முற்றிற்று.

# கம்பனின் சமயம்

oooooooo

## அயோத்தியாகாண்டம்

### கடவுள் வாழ்த்து

வான் நின்று இழிந்து வரம்பு இகந்த
மாபூதத்தின் வைப்பு எங்கும்,
ஊனும் உயிரும் உணர்வும் போல்
உள்ளும் புறனும் உளன் என்ப;
கூனும் சிறிய கோத்தாயும்
கொடுமை இழைப்பக் கோல் துறந்து,
கானும் கடலும் கடந்து, இமையோர்
இடுக்கண் தீர்த்த கழல் வேந்தை. [1399]

என்பது அயோத்தியாகாண்டத்தின் கடவுள் வாழ்த்துப் பாடல். இதில் இராமனே பரம்பொருள் என்கிறான். அப்படிக் கூறும்போது "வரம்பிகந்த மாபூதத்தின் வைப்பு எங்கும் ஊனும் உயிரும் உணர்வும் போல் உள்ளும் புறனும் உளன் என்ப" என்னும் பகுதியால், "யச்ச கிஞ்சித் ஜகத் யஸ்மிந் த்ருச்யதே ச்ரூயதேऽபி வா। அந்தர் பஹிச்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தித:॥" [இவ்வுலகில் காண்பனவும், கேட்பனவுமான அனைத்தின் உள்ளும் புறமும் வியாபித்து விளங்குகிறான் நாராயணன்.] என்னும் தைத்திரீய நாராயணவல்லீ வாக்கியத்தையும் "உடல்மிசை உயிர் எனக் கரந்தெங்கும் பரந்துளன்" [திருவாய் 1-1-7] என்னும் திருவாய்மொழிப் பகுதியையும் உணர்த்துவதன் மூலம் தான் வைஷ்ணவ விசிஷ்டாத்வைத மதத்தைச்சேர்ந்தவன் என்பதைத் தெளிவாகக் காட்டுகிறான்.

### மந்திரப்படலம்

புக்கபின் 'நிருபரும் பொரு இல் சுற்றமும்
பக்கமும் பெயர்க' எனப் பரிவின் நீங்கினான்;
ஒக்கநின்று, உலகு அளித்து, யோகின் எய்திய
சக்கரத்தவன் எனத் தமியன் ஆயினான். [1401]

என்னும் இரண்டாம் பாடலில் "ஏகோஹ வை நாராயண ஆஸீத் ந ப்ரஹ்மா நேஶாந:" [நாராயணன் ஒருவனே முதலில் இருந்தான்; பிரமனுமில்லை; சிவனுமில்லை] என்னும் மஹோபனிஷத் வாக்யத்தைக் கருத்திற்கொண்டு, "ஒக்க நின்று உலகு அளித்து, யோகின் எய்திய சக்கரத்தவன் எனத் தமியன் ஆயினன்" [தமியன்—தனியாயிருப்பவன்] என்று பிரளயகாலத்தில் வேறெவருமில்லாத போது தான் ஒருவனாகவேயிருந்து யோகநித்திரை கொள்ளுகிறவன் சக்கரத்தவனான திருமாலே என்று உணர்த்தினன் கம்பன். "உலகு அளித்து" என்றும், "உலகு ஒழித்து" என்றும் பாடம். "பிறிவரு தம்பியும் பிரியப் பேருலகிறுதியில் தானென இருந்த ஏந்தல்" [கிட்கிந்தை 126] என்று இதே கருத்தைக் கிட்கிந்தாகாண்டத்திலும் கம்பன் உணர்த்துவது கழகக் குறிப்புரையிலேயே எடுத்துக்காட்டப்பட்டது. இவ்வண்ணமாகச் சிவன் முதலான வேறு எந்த தேவர்களுக்கும் கம்பன் தன் காவியத்தில் எங்குமே பெருமை கூறியதில்லை.

'பெருமகன் என்வயின் பிறக்கச் சீதையாம்
திருமகள் மணவினை தெரியக் கண்ட யான்,
அருமகன் நிறை குணத்து அவனிமாது எனும்
ஒருமகள் மணமும் கண்டு உவப்ப உன்னினேன்.'

[1427]

'நிவப்பு உறு நிலன் எனும் நிரம்பும் நங்கையும்,
சிவப்பு உறு மலர்மிசைச் சிறந்த செல்வியும்,
உவப்பு உறு கணவனை உயிரின் எய்திய
தவப் பயன் தாழ்ப்பது தருமம் அன்று அரோ.'

[1428]

என்னும் பாடல்களில் ஸ்ரீதேவிக்கும் பூதேவிக்கும் நாயகனை திருமாலே இராமபிரான் என்று உணர்த்தினன். "திருமாலுக்குச் சீதேவியும் பூதேவியும் மனைவியர் ஆதலின் அவ்வியைபும் விளக்கியவாறு" என்பது கழகக்குறிப்புரை.

'புறத்து நாம் ஒரு பொருள் இனிப் புகல்கின்றது எவனோ?
அறத்தின் மூர்த்தி வந்து அவதரித்தான் என்பது அல்லால்,
பிறத்து யாவையும் காத்து அவை பின் உறத் துடைக்கும்
திறத்து மூவரும் திருத்திய திருத்தும் அத் திறலோன்'
[1435]

என்னும் பாடலில் "அறத்தின் மூர்த்தி அவதரித்தான்" என்னும் பகுதியால் திருமாலே இராமனாக வந்து அவதரித் தான் என்று கூறி, அவனே படைத்தல், அளித்தல், அழித்தல், எனும் முத்தொழில்களையும் செய்து முடிக்கவல்லவன் என்று காட்டினான். "தருமமூர்த்தியாகிய திருமாலே வந்து அவ தாரம் செய்துள்ளான்" என்பது கழகப்பொழிப்புரை. "மூவர் காரியமும் திருத்தும் முதல்வனை" என்னும் பெரி யாழ்வார் பாசுரத்தைக் கம்பன் இங்கு நினைக்கிறான் என்பது வெளிப்படை.

'பொன் உயிர்த்த பூமடந்தையும், புவி எனும் திருவும்,
இன் உயிர்த்துணை இவன் என நினைக்கின்ற இராமன்,
என் உயிர்க்கு என்கை புல்லிது; இங்கு இவற் பயந்து எடுத்த
உன் உயிர்க்கு என நல்லன், மன் உயிர்க்கு எலாம் உரவோய்!'
[1436]

என்னும் பாடலில் மறுபடியும் ஸ்ரீ பூமிநாயகனாகிற திரு மாலே இராமன் என்று கோஷித்து,

"வாரம் என் இனிப் பகர்வது? வைகலும் அனையான்
பேரினால் வரும் இடையுறு பெயர்கின்ற பயத்தால்,
வீர! நின் குல மைந்தனை வேதியர் முதலோர்
யாரும், 'யாம் செய்த நல் அறப் பயன்' என இருப்பார்."
[1437]

என்னும் அடுத்த பாடலில் அவ்விராமன் பெயரைக் கூறுவதால் இடையூறுகள் எல்லாம் அகலும் என்றும், அந்தணர் முதலான அனைவரும் அவ்விராமனையே தாம் செய்த தவப்பயனாகக் கொண்டிருக்கின்றார்கள் என்றும் முரசறைகின்றான் கம்பன்.

"கண்ணினும் நல்லன்; கற்றவர் கற்றிலா தவரும்
உண்ணும் நீரினும் உயிரினும் அவனையே உவப்பார்" [1438]

என்னும் அடுத்தபாடலில், நம்மாழ்வாரைப்போன்ற கற்ற வர்களோடு, கற்றிலாதவரோடு வாசியற அவனை உண்ணும் சோறு பருகுநீராகக்கொள்வர் என்று கூறுவதும் குறிக் கொள்ளத்தக்கது.

'ஆளும் நல் நெறிக்கு அமைவரும் அமைதி இன்று ஆக.
நாளும் நம் குல நாயகன் நறை விரி கமலத்
தாளின் நல்கிய கங்கையைத் தந்து, தந்தையரை
மீள்வு இல் இன் உலகு ஏற்றினன், ஒரு மகன் மேல் நாள்'
[1465]

என்னும் பாடலில் நாராயணனுடைய திருவடியிலிருந்து தோன்றியது கங்கை என்று கூறியிருக்கிறான் கவிஞன். இவனே சிவனுடைய சடையில் தங்கியிருப்பது கங்கை என்றும் கூறியிருப்பதைக் காண்கிறோம். இதிலிருந்து திருமாலுடைய திருவடிநீரைத் தலையில் தரித்த சிவனைக் கம்பன் பரம்பொருளாகக் கருதியிருக்கமுடியாது என்று விளங்குகிறது.

அன்னள் ஆயும். அரும் பெறல் ஆரமும்.
நல் நிதிக் குவையும் நனி நல்கித் தன்
துன்னு காதல் சுமித்திரையோடும் போய்.
மின்னும் நேமியன் மேவு இடம் மேவினள். [1490]

மேவி. மென் மலராள் நிலமாது எனும்
தேவிமாரொடும். தேவர்கள் யாவர்க்கும்
ஆவியும் அறிவும் முதல் ஆயவன்
வாவி மா மலர்ப் பாதம் வணங்கினள். [1491]

என்னும் பாடல்களில் திருமாலை எல்லா தேவர்களுக்கும் ஆவியையும், அறிவையும் அளிக்கும் முதல்வனாயிருப்பவன் என்று கம்பன் கோஷித்திருப்பது காணத்தக்கது.

# கம்பனின் சமயம்

'என் வயிற்று அரு மைந்தற்கு இனி அருள்
உன் வயிற்றது' என்ருள். உலகு யாவையும்
மன் வயிற்றின் அடக்கிய மாயனைத்
தன் வயிற்றின் அடக்கும் தவத்தினுள். [1492]

என்னும் பாடலில் எல்லா உலகையும் தன் வயிற்றில் அடக்கினவன் திருமால் என்று கவிக்கூற்ருகவே கம்பன் கோஷிக்கிருன்.

மந்தரை சூழ்ச்சிப்படலம்

இப்படலத்தில் திருமாலைப்பற்றியோ. சிவனைப்பற்றியோ குறிப்பிடத்தக்க பாடல் ஒன்றுமில்லை. "வீடு எனும் உலகின் கீழ் விமானம்" [*1529*] என்று மோக்ஷத்தை ஓர் உலகமாகக் குறிப்பிடுகையால் கம்பன் விசிஷ்டாத்வைதியேயொழிய அத்வைதியல்லனென விளங்குகின்றது.

கைகேயி சூழ்வினைப்படலம்

நவ்வி வீழ்ந்தென, நாடக மயில் துயின்றென்னக்.
கவ்வை கூர்தரச். சனகியாம் கடிகமழ் கமலத்து
அவ்வை நீங்கும் என்று அயோத்தி வந்து அடைந்த
அம் மடந்தை
தவ்வை ஆம் எனக். கிடந்தனள். கேகயன் தனயை. [1583]

'ஆழியான் முடி சூடும் நாள். இடை
ஆனபாவி இது ஓர் இரா
ஊழி ஆயின ஆறு!' எனு. 'உயர்
போதின் மேல் உறை பேதையும்.
ஏழி லோகமும் எண் தவஞ் செய்த
கண்ணும். எங்கள் மனங்களும்
வாழும் நாள் இது!' எனு. எழுந்தனர்;
மஞ்சு தோய் புய மஞ்சரே. [1638]

என்னும் பாடல்களில் சீதையை ஸ்ரீதேவியென்று குறிப்பிட்டார்.

மூவராய் முதலாகி மூலமது ஆகிஞாலமும் ஆகும் அத்
தேவதேவர் பிடித்த போர் வில் ஒடித்த சேவகர், சேண்நிலம்
காவல் மா முடி சூடு பேர் எழில் காணலாம் எனும் ஆசை கூர்
பாவைமார் முகம் என்ன முன்னம் மலர்ந்த பங்கய ராசியே.
[1645]

என்னும் பாடலில் இராமனை "மூவராய் முதலாகி மூலமதாகி ஞாலமும் ஆகும்... போர் வில் ஒடித்த சேவகர்" என்று பாடியிருக்க, கழகவுரைகாரர் தம் அபிமானத்தாலே "மூவராய்...ஆகும்" என்னும் பகுதியை "அத்தேவதேவர்" எனப்படும் சிவனுக்கு விசேஷணமாக்கி உரையிட்டார். பற்பலபாடல்களில் "மூவராய், முதலாகி, மூலமாகி, ஞாலமாகும்" முதலான விசேஷணங்களை திருமாலுக்கும், திருமாலின் அவதாரமான இராமனுக்கும் கம்பர் இட்டிருக்கிறாரே யொழிய, எங்குமே இப்பெருமைகளை சிவனுக்குச் சொன்னதில்லை. இப்படலத்திலேயே,

'நீல மா முகில் அனன்தன் நிறையினோடு அறிவும் நிற்க,
சீலம் ஆர்க்கு உண்டு? கெட்டேன்' தேவரின் அடங்குவானோ?
காலமாக் கணிக்கும் நுண்மைக் கணக்கையும் கடந்து நின்ற
மூலமாய், முடிவு இலாத மூர்த்தி இம் முன்பன்!' என்பார்.
[1674]

என்னும் பாடலில், 'நீலமாமுகிலனன்' என்னும் பதத்தாலே இராமன் திருமாலின் அவதாரமே என்பதை உணர்த்தி, அவனை "மூலமாய் முடிவிலாத மூர்த்தி" என்று குறிப்பிட்டதும் காணத்தக்கது. "அத்தேவதேவர் பிடித்த போர்வில் ஒடித்த சேவகர்" என்று சிவனைக்காட்டிலும் இராமனுக்குப் பெருமைசொல்லும் இப்பாடலிலும், "மூவராய் முதலாகி" முதலான பதங்களை வில் ஒடித்த சேவகனை இராமனுக்கு விசேஷணமாக்குவதே பொருந்தும்.

'என்றனள்' என்னக் கேட்டான். எழுந்த பேர் உவகை பொங்கப்
பொன் திணி மாடவீதி பொருக்கென நீங்கிப் புக்கான்;
தன் திருவுள்ளத்துள்ளே தன்னையே நினையும் மற்றக்
குன்று இவர் தோளினானைத் தொழுது வாய் புதைத்துக் கூறும்.
[1663]

என்னும் பாடலில் நாராயணனின் கோயிலுக்குச் சென்ற இராமன் தன்னையே தியானித்தான் என்று கூறுவதன் மூலமும், "நலம் கிளர் பூமியென்னும் நங்கையை நறும் துழாயின் அலங்கலான் புணரும் செல்வம்" [1654] "பைந் துழாய்த் தெரியலாய்க்கே நல்வினை பயக்க" [1671] என்று முன்பின் பாடல்களில் இராமனைத் துழாய்மாலையணிந்த பூமிநாயகனுகக் கூறுவதன் மூலமும் இராமன் திருமாலின் அவதாரமே என்று உணர்த்தியதும் அறியத்தக்கது.

'வாரணம் அரற்ற வந்து, கரா உயிர் மாற்றும் நேமி
நாரணன் ஒக்கும், இந்த நம்பிதன் கருணை!' என்பார்;
ஆரணம் அறிதல் தேற்ரு ஐயனை அணுகி நோக்கிக்,
காரணம் இன்றியேயும், கண்கள் நீர் கலுழ நிற்பார்.
[1673]

என்னும் பாடலில் கஜேந்திராழ்வான் 'ஆதிமூலமே' என்றவுடன் ஓடிவந்த நாராயணனே இராமன் என்றும், அவனே வேதங்களாலும் அறியவொண்ணுத பரம்பொருள் என்றும் கோஷிப்பதும் குறிக்கொள்ளத்தக்கது.

வேத்து அவை முனிவரோடு
விருப்பொடு களிக்கும், மெய்மை
ஏத்து அவை இசைக்கும், செம்பொன்
மண்டபம் இனிதின் எய்தான்
ஒத்து அவை உலகத்து எங்கும்
உள்ளவை உணர்ந்தார் உள்ளம்
பூத்தவை வடிவை ஒப்பான்
சிற்றவை கோயில் புக்கான். [1684]

என்னும் பாடலில், "உணர்ந்தார் உள்ளம் பூத்த ஐவடிவை ஒப்பான்" என்று பரம், வ்யூஹம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என்னும் ஐந்து வடிவங்களை உடைய பரம் பொருளாக ஞானிகளால் புகழப்படுகின்றவன் இராமன் என்றும்.

என்று கொண்டு இனைய கூறி, அடியிணை இறைஞ்சி மீட்டும்,
தன் துணைத் தாதை பாதம் அத்திசை நோக்கித் தாழ்ந்து,
பொன் திணி போதினாளும் பூமியும் புலம்பி நையக்,
குன்றினும் உயர்ந்த தோளான் கோசலை கோயில் புக்கான்.
[1694]

என்னும் பாடலில் ஸ்ரீபூமிநாயகனே இராமன் என்றும் உணர்த்துவதும் காணத்தக்கது. இவற்றிலிருந்து இப் படலத்திலும் திருமாலின் அவதாரமே இராமன் என்றும், அவனே முழுமுதல்வன் என்றும் கம்பன் கருதியிருக்கிறான் என்பது விளங்கும்.

நகர் நீங்கு படலம்

கையைக் கையின் நெரிக்கும்; தன் காதலன்
வைகும் ஆல் இலை அன்ன வயிற்றினைப்
பெய் வளைத் தளிரால் பிசையும்; புகை
வெய்து உயிர்க்கும்; விழுங்கும்; புழுங்குமால். [1704]

என்னும் பாடலில் ஆலிலையில் பள்ளிகொண்ட திருமாலே இராமன் என்று காட்டினான் கம்பன்.

'மெய் ஆர் தவமே செய்து, உன்மிடல் மார்பு அரிதில் பெற்ற
செய்யாள் என்னும் பொன்னும், நிலமாது என்னும் திருவும்
உய்யார்! உய்யார்! கெடுவேன்! உன்னைப் பிரியின் வினையேன்!
ஐயா! கைகேசியை நேர் ஆகேனோ நான்?' என்றான்.
[1758]

என்னும் பாடலில் தசரதன் வாயிலாகவும் ஸ்ரீபூமிநாயகனை திருமாலே இராமன் என்று உணர்த்துகிறான்.

# கம்பனின் சமயம்

கண்ணில் கடைத் தீ உக, நெற்றியில் கற்றை நாற,
விண்ணில் சுடரும் சுடர் வீய, மெய் நீர் விரிப்ப,
உள் நிற்கும் உயிர்ப்பு எனும் ஊதை பிறக்க, நின்ற
அண்ணல் பெரியோன் தனது ஆதியின் மூர்த்தி ஒத்தான்.
[1807]

என்னும் பாடலில் இலக்குவனை ஆதிசேஷனின் அவதாரம் என்பதன் மூலம் திருவவதாரப்படலத்தில் ''வளையொடு திகிரியும் வடவை தீதர விளைதரு கடுவுடை விரிகொள் பாயலும் இளைஞர்கள் என அடி பரவ'' என்று கூறியதை நினைவுறுத்துகிறான்.

அன்னான்தனை ஐயனும் ஆதியொடு அந்தம் என்று
தன்னாலும் அளப்பருந் தானும் தன் பாங்கர் நின்ற
பொன் மான் உரியானும் தழீஇ எனப் புல்லிப் பின்னைச்
சொல் மாண்பு உடை அன்னை சுமித்திரை கோயில் புக்கான்.
[1833]

என்னும் பாடலில் இலக்குவனை இராமன் தழுவிநின்ற நிலை, சிவனைத் திருமால் தழுவி நின்றது போலிருந்தது என்று கூறும்போது ''ஆதியோடு அந்தம் என்று தன்னாலும் அளப் பரும் தானும்'' என்று திருமாலை ஆதியந்தமற்றவனென்றும் திருமாலுக்கு இராமனோடு ஐக்யத்தையும் கூறியிருப்பதை யும், சிவனை 'பொன்மான் உரியான்' [பொன்னிறம் வாய்ந்த மான்தோலையுடைய உருத்திரன்]என்று மாத்திரம் குறித்திருப்பதையும் காணலாம்.

துறந்து போம் எனச் சொற்ற சொல் தேறுமோ?
உறைந்த பால் கடல் சேக்கை உடன் ஒரீஇ,
அறம் திறம்பும் என்று ஐயன் அயோத்தியில்
பிறந்த பின்பும் பிரிவு இலள் ஆயினாள். [1914]

என்னும் பாடலில், ''திருமால் பாற்கடலில் தன்னுடன் சேர்ந்திருந்த இருப்பினின்றும் நீங்கி அறத்தை நிலைநிறுத்து

வதற்காக இராமனுகப் பிறந்த பின்பும் அவனைப் பிரிய மாட்டாதவளாய். சீதையாகப்பிறந்த திருமகள், 'உன்னைப் பிரிந்து நான் வனம் செல்வேன்' என்று சொல்லுவதைப் பொறுப்பாளோ" என்று கவிக்கூற்றுகக் கூறுவதன் மூலம் லக்ஷ்மீநாராயணர்களே சீதாராமர்கள் என்னும் தன் முடிவைக் கல்வெட்டாக்கிக் காட்டுகிருன் கவிஞன். "இராமன் திருமடந்தை காந்தன்" *[1785]* "மாமலர்மேல் பெண்" *[1796]* "சீதை பிரியினும் தீராத்திரு" *[1804]* "பன்னகப் பாயலுள் பள்ளி நீங்கினுன்" *[1857]* "தாமரைப் பொன்னும் தானும்" *[1929]* என்று இப்படலத்தில் மற்றுமுள்ள பாடல்கள் பலவற்றிலும் இவ்வுண்மையைப் பலவாருக உணர்த்திச்செல்கின்ருன் கவிஞன். பிள்ளை கூறுவதுபோல் மும்மூர்த்திகளின் அவதாரம் இராமன் என்பது கம்பன் கருத்தாயின் இதுவரை நம்மால் காட்டப்பட்டவையும், இனிநாம் காட்டப்போகின்றவையுமான நூற்றுக்கணக்கான பாடல்கள் பொருந்தமாட்டா என்பது நடுநிலையாளர்களுக்கு நன்கு விளங்கும்.

### தைலமாட்டு படலம்

கைகள் நீர் பரந்து, கால் தொடரக் கண் உகும்
வெய்ய நீர் வெள்ளத்து மெள்ளச் சேறலால்,
உய்ய ஏழ் உலகும் ஒன்ருன நீர் உழல்
தெய்வ மீன் ஒத்தது அச் செம்பொன் தேர் அரோ.
[1931]

என்னும் பாடலில் திருமாலின் மத்ஸ்யாவதாரத்தை அனுபவித்தான் கம்பன். "உய்ய ஏழுலகம் ஒன்ருன நீர் உழல் தெய்வமீன்" என்று ஏழுலகமும் உய்வு பெறுவதற்காக எடுக்கப்பட்டது இவ்வவதாரம் என்று கோஷிப்பது காணத்தக்கது. இராமாவதாரத்தைப் பாடவந்த கம்பன் மற்றுமுள்ள அவதாரங்களையும் ஆங்காங்கு அனுபவித்துப் பாடிவருவதும், சிவனுக்குப் பரத்துவத்தைக் கூறும் அடி

முடி தேடியகதை முதலான கதைகளில் ஒன்றையும் கம்பன் தன் காவியத்தில் எங்குமே தொடுவதில்லை என்பதும் நடு நிலையாளர்களால் நோக்கத்தக்கது.

இந்திரன் முதல்வராய கடவுளர் யாரும் ஈண்டிச்
சந்திரன் அனையது ஆங்கு ஓர் மானத்தில் தலையில் தாங்கி,
'வந்தனன் எந்தை தந்தை' என மனம் களித்து, வள்ளல்
உந்தியான் உலகின் உம்பர் மீள்கிலா உலகத்து உய்த்தார்.
[1989]

என்னும் பாடலில் தேவர்களெல்லாம் தசரதனை ஒரு விமானத்தில் வைத்துத் தாங்கள் தலையாலே சுமந்துசென்று திருமாலின் உந்திக்கமலத்தில் பிறந்த பிரமனின் உலகத்திற் கும் மேற்பட்ட புநராவ்ருத்தி (திரும்பிவருதல்) இல்லாத மோக்ஷலோகத்தில் சேர்த்தார்கள் என்று பாடுவதிலிருந்து கம்பன் வைஷ்ணவ விசிஷ்டாத்வைதியேயென்று விளங்குகிறது.

இருந்த அந்தணனோடு எல்லாம் ஈன்றவன்றன்னை ஈனப்
பெருந் தவம் செய்த நங்கை, கணவனில் பிரிந்து, தெய்வ
மருந்து இழந்தவரின் விம்மி, மணி பிரி அரவின் மாழ்கி,
அருந்துணை பிரிந்த அன்றில் பெடை என அரற்றலுற்றாள்.
[1991]

என்னும் பாடலில் உந்திக்கமலத்தில் தங்கிய பிரமனோடு மற்றுமுள்ள எல்லாப்பொருள்களையும் ஈன்றவனை திருமாலே இராமன் என்று உணர்த்துவதையும், மற்றொரு பாடலில் அவ்விராமனையே "திருவின் நாயகன்" [1982] என்று அழைப்பதையும், "அடக்கும் ஐம்பொறியொடு கரணத்து அப்புறம் கடக்கும் வால் உணர்வினுக்கு அணுகும் காட்சியான்" [1955] "மறைகளை மறந்துபோய் வனத்து வைகுவான்" [1956] என்னும் பாடல்களில் அவ்விராமனே பரம்பொருள் என்று கோஷித்ததையும் காண்பது.

கங்கைப்படலம்

மங்கையர்க்கு விளக்கு அன்ன மாதையும்
செங்கை பற்றினன், தேவரும் துன்பு அறப்
பங்கயத்து அயன் பண்டு தன் பாதத்தின்
அம் கையின் தரும் கங்கையின் ஆடினன்.

[2031]

என்னும் கவிக்கூற்றுயிருக்கும் பாடலிலும், கங்கை இராமனைப் போற்றுவதான அடுத்த பாடலில் ''என்தந்த'' என்னும் தொடராலும் சதுமுகன் கையில் சதுப்புயன் தாளில் சங்கரன் சடையினில் தங்கியது கங்கையென்று உணர்த்துவதன்மூலம் விஷ்ணுபரத்துவ நிர்ணயம்செய்கிறான் கவிஞன். ''அகிலமன்றளந்த புண்டரீகமென்பதத்திடைப் பிறந்து பூமகனார் கொண்ட தீர்த்தமாய் அரன்கொள'' [537] என்று பாலகாண்டத்திலும் மங்கைபாகன் சடையில் வைத்த கங்கை, மால் பதத்து நீர் என்று உணர்த்தியதும் உணரத்தக்கது.

வெம் கண் நாகக் கரத்தினன், வெள் நிறக்
கங்கை வார் சடைக் கற்றையன், கற்புடை
மங்கை காண நின்று ஆடுகின்றான், வகிர்த்
திங்கள் சூடிய செல்வனில் தோன்றினான்.

[2033]

தள்ளும் நீர்ப் பெருங் கங்கைத் தரங்கத்தான்,
வள்ளி நுண் இடை மா மலராளொடும்
வெள்ளி வெள் நிறப் பாற்கடல் மேலை நாள்
பள்ளி நீங்கிய பான்மையில் தோன்றினான்.

[2034]

என்னும் பாடல்களில் கங்கையாடிய சீதாராமனை முறையே சிவனுக்கும் திருமாலுக்கும் ஒப்பிட்டுப்பேசும்போது சிவனை இராமனிலும் வேறுபடுத்திப்பேசியும், திருமாலை இராமனாகவே பேசியும் ஒப்பிடுவது நோக்கத்தக்கது.

## கம்பனின் சமயம்

தேவர்தேவன் செறி சடைக் கற்றையுள்
கோவை மாலே எருக்கொடு கொன்றையின்
பூவும் நாறலள். பூங்குழல் கற்றையின்
நாவி நாள் மலர் கங்கையும் நாறினாள். [2036]

என்னும் பாடலில் எருக்கு கொன்றை முதலான கடிய நாற்றமுடைய சிவனுடைய சடைமலர்களின் நாற்றம் நீங்கப் பெற்று, சீதாதேவியின் குழலிலுள்ள கஸ்தூரி, செவ்விப் பூக்கள் முதலானவற்றின் நறுமணம் கமழப்பெற்றாள் கங்கை என்று பாடுகிறான். "கரந்தை மத்தமொடு எருக்கு அலர் கூவிளை கடுக்கை நிரந்த பொற்சடை" [529] என்று சிவன் சடையிலுள்ள தமோகுணம் நிறைந்த துர்க்கந்த புஷ்பங்களையெல்லாம் மற்றொரு பாடலில் முன்னமே வரிசைப் படுத்திக் கூறியதும் குறிக்கொள்ளத்தக்கது.

சுழி பட்டு ஓங்கிய தூங்கு ஒலி ஆற்றுத் தன்
விழியில் சேல் உகள் வால் நிற வெள்ளத்து
முழுகித் தோன்றுகின்றாள். முதல் பாற்கடல்
அழுவத்து அன்று எழுவாள் என ஆயினாள். [2039]

என்னும் பாடலில் கங்கையாடியெழுந்த சீதை, பாற்கடலி னின்றும் எழுந்த லக்ஷ்மீதேவியே என்று பாடுவது காணத் தக்கது. இவ்வண்ணமாக சரஸ்வதி, பார்வதி ஆகியவர்களின் அவதாரமாகக் கவிஞன் எங்குமே சீதையைக் குறிப்பிடாம லிருப்பதிலிருந்து இராமன் மும்மூர்த்திகளின் அவதாரம் என்னும் கொள்கை கம்பனால் கணிசிக்கவும் படாதது என்று விளங்குகிறது.

செய்ய தாமரைத் தாள் பண்டு தீண்டலால்
வெய்ய பாதகம் தீர்த்து விளங்கினாள்;
ஐயன் மேனியெலாம் அளைந்தாள்; இனி
வையம் மா நரகத்திடை வைகுமே?. [2040]

என்னும் பாடலில் உலகளந்த திரிவிக்கிரமனின் திருவடியை முன் தீண்டப்பெற்றதால் (சிவன் தொடர்க்கமான) எல்லாச் சீவர்களின் பாவங்களையும் தீர்த்துவிளங்கிய கங்கை இப் போது இராமனின் திருமேனி முழுவதையுமே தீண்டப்

பெற்றமையால் உலகத்தில் எவருமே நரகில் வாழமாட்டார்கள் என்று கூறுவதன் மூலம் இராமனே பரம்பொருளான திருமால் என்று உணர்த்துவது காணத்தக்கது.

வருந்தித் தான் தர வந்த அமுதையும்
'அருந்தும் நீர்' என்று அமரரை ஊட்டினுன்,
விருந்து மெல் அடகு உண்டு விளங்கினுன்;
திருந்தினுர் வயின் செய்தன தேயுமோ? [2042]

என்று கடல்கடைந்து அமுதளித்த திருமாலே இராமன் என்றுபாடினுன் கம்பன். 'திறல்கொள் ஆமையாய் முதுகினில் மந்தரம் திரிய விறல்கொள் ஆயிரம் தடக்கைகள் பரப்பி மீவலிப்ப'' [501] என்று முன்னும், ''தாழி தரை யாகத் தண்தயிர் நீராகத் தடவரையே மத்தாக தாமரைக்கை நோவ ஆழிகடைந்து'' [ஆரணிய-சரபங்கர்] என்று பின்னும் அமுதங் கடைந்தவன் திருமாலேஎன்று குறிப்பிடுவதுகாணத்தக்கது.

வனம்புகு படலம்

செந்தழல் புரி செல்வன், திசை முக முனி செவ்வே
தந்தன உயிர் எல்லாம் தன் உயிர் என நல்கும்
அந்தணன், 'உலகு ஏழும் அமை' எனின், அமரேசன்
உந்தியின் உதவாமே உதவிடு தொழில் வல்லான் [2109]

என்னும் பாடலில் தேவேசனுன திருமாலுடைய உந்தியிலிருந்தே உண்டாகின்றவை ஏழுலகங்களும் என்று உணர்த்தினுன்.

''கங்கையாளொடு கரியவள் நாமகள் கலந்த
சங்கம் ஆதலின் பிரியலென்; தாமரைச் செங்கண்
அம் கண் நாயக! அயனுக்கும் அரும்பெறல் தீர்த்தம்
எங்கள் போலியர் தரத்தது அன்று; இருத்தி ஈண்டு'' என்றுன். [2118]

என்னும் பாடலில் இராமன் தாமரைச் செங்கண் தனித்தலைவனுன திருமாலே என்றும், அவனுடைய ஸ்ரீபாத தீர்த்தமான கங்கையோடு, யமுனே, ஸரஸ்வதியும் கலந்த திரிவேணீ (முக்கூடல்) தீர்த்தம் பிரமனுக்கும் பெற அரியது என்றும் பாடியிருப்பது காணலாம்.

சித்திரகூடப் படலம்

நினையும் தேவர்க்கும் நமக்கும் ஒத்து ஒருநெறி நின்ற
அனகன் அம் கணன் ஆயிரம் பெயர் உடை அமலன்
சனகன் மா மட மயிற்கு அந்தச் சந்தனம் செறிந்த
கனக மால் வரை இயல்பு எலாம் தெரிவுறக் காட்டும்.
[2135]

என்னும் பாடலில் நம்மைப்போலே தேவர்கட்கும் மோக்ஷோபாயமாயிருப்பவனும். குற்றமற்றவனும், தாமரைக்கண்ணனும், ஆயிரம் பெயரை உடைய அமலனுயிருப்பவனுமான திருமாலே இராமன் என்று கூறிப் பரதத்வ நிர்ணயம் செய்தான் கம்பன். "உவரிவாயன்றிப் பாற்கடல் உதவிய அமுதே" [2139] "சீலம் இன்னது என்று அருந்ததிக்கு அருளிய திருவே" [2150] "தெரிவைமார்க்கொரு கட்டளையெனச் செய்த திருவே" [2167] என்னும் பாடல்களில் லக்ஷ்மீதேவியே சீதை என்று காட்டுகிருன்.

நீண்ட மால் வரை மதி உற, நெடு முடி நிவந்த
தூண்டு மா மணிச் சுடர் சடைக் கற்றையில் தோன்ற.
மாண்ட வால் நிற அருவி அம் மழ விடைப் பாகன்
காண் தகும் சடைக் கங்கையை நிகர்ப்பன காணுய்! [2141]

என்னும் பாடலில் மதிசூடிய சடைக்கற்றைகளில் கங்கை நீர் வடிகின்ற சிவன் தலையை பிறைமதிதவழப்பெற்றதாய், மணிகளின் சுடர்க்கற்றையை உடையதாய். அருவிகள் விழப்பெற்றதான சித்திரகூடச்சிகரத்திற்கு ஒப்பிட்டான். இத்தகைய பாடல்களில் சிவனுக்குப் பரம்பொருட்குரிய பெருமைகள் ஒன்றும் குறிக்கப்படுவதில்லையென்பதும் சடைமுடி முதலான தாழ்வுகளே காட்டப்படுகின்றனவென்பதும் காணத்தக்கது.

அளிக்கும் நாயகன் மாயை புக்கு அடங்கினன் எனினும்.
களிப்பில் இந்தியத்து யோகியைக் கரக்கிலன் அதுபோல்
ஒளித்து நின்றுளர் ஆயினும். உருத் தெரிகின்ற
பளிக்கறைச் சில பரிமுகமாக்களைப் பாராய். [2145]

என்னும் பாடலில் பரம்பொருளான திருமால் இவ்வுலகில் தன்னை மறைந்துக்கொண்டு பிறந்தாலும், யோகிகளுக்குத் தன்னை மறைக்கமாட்டான் என்று பாடினன்.

மா இயல் உதயம் ஆம் துளப வானவன்.
மேவிய பகை இருள் அவுணர் வீந்து உகக்
கா இயல் குடவரைக் காலநேமி மேல்
ஏவிய திகிரி போல, இரவி ஏகினன். [2172]

சக்கரம் தானவன் உடலில் தாக்குற,
எக்கிய சோரியில் பரந்தது, எங்கணும்
செக்கர்; அத்தியவன் வாயில் தீர்ந்து, வேறு
உக்க வான் தனி எயிறு ஒத்தது இந்துவே. [2173]

என்னும் பாடலில் சூரியன் மறைந்து, செக்கரும் சந்திரனும் தோன்றியது, திருமாலின் சக்கரத்தால் உயிரிழந்த காலநேமியின் குருதி வெள்ளம் பரந்தது போலும், அவன் பல் ஒன்று உதிர்ந்து விழுந்திருப்பது போலுமிருக்கிறது என்றான்.

இன்னணம் இளையவன் இழைத்த சாலையில்.
பொன் நிறத் திருவொடும், குடிபுக்கான்; அரோ
நல் நெடுந் திசைமுகன் அகத்தும், நம் அனோர்க்கு
உன்னரும் உயிருளும், ஒக்க வைகுவான். [2182]

மாயம் நீங்கிய சிந்தனை, மா மறை.
தூய பாற்கடல், வைகுந்தம், சொல்லல் ஆம்
ஆய சாலை, அரும்பெறல் அன்பினன்,
நேய நெஞ்சின் விரும்பி நிரம்பினன். [2183]

என்னும் பாடல்களில் நான்முகனிடத்திலும், நம் உயிரிலும், வேதத்திலும், பாற்கடலிலும், வைகுந்தத்திலும் வாழ்கின்ற திருமாலே இராமன் என்று காட்டினன். இங்கு நான்முகனும் ஒரு சிவனே என்றும் அவனுள்ளும் வாழ்பவன் திருமாலாகிற இராமனே என்றும் காட்டியதால் இராமன் மும்மூர்த்திகளின் அவதாரம் என்னும் வாதம் அடியறுக்கப்பட்டது. பிரமருத்திரர்களுக்குள்ளுமிருப்பவன் திருமாலே என்பதைக்கருதியே 'சூலமும் திகிரிசங்கும்'' என்னும் பாடல் அவதரித்தது என்று இப்பாடலிலிருந்து விளங்குகிறது.

# கம்பனின் சமயம்

பள்ளிபடைப் படலம்

'வேறு அடங்கலர் ஊர் என மெல்லிதால்;
சூல் தடங் கருங் கார் புரை தோற்றத்தான்
சேல் தடங்கண் திருவொடும் நீங்கிய
பால் தடங்கடல் ஒத்தது, பார்' என்ருன். [2227]

என்னும் பாடலில் சீதாராமனைப் பிரிந்த அயோத்தியானது திருவோடு கூடிய 'கொண்டல் வண்ணனை திருமாலைப் பிரிந்த பாற்கடல்போலேயிராநின்றது என்று பரதன் வாயிலாகக் கூறுவதன் மூலம் லக்ஷ்மீநாராயணர்களே சீதா ராமர்களாக அவதரித்தனர் என்று உணர்த்துகிருன் கவிஞன்.

'ஏழ் உயர் மதக் களிற்று இறைவ! ஏகினை,
வாழிய கரியவன், வறியன் கை எனப்
பாழி அம் புயத்து நின் பணியின் நீங்கலா
ஆழியை, இனி, அவற்கு அளிக்க எண்ணியோ?' [2245]

என்னும் பாடலில் 'கரியவனை திருமாலின் அவதாரமான இராமனுடைய கை ஆழி(சக்கரம்)இல்லாமலிருக்கிறதென்று கருதி உன் ஆஜ்ஞாசக்கரத்தை அவனிடம் கொடுத்துச் சென்றனையோ' என்று பரதன் தசரதனைக் குறித்துப் புலம்பும் பாடலிலும் சக்கரதாரியான திருமாலே இராமன் என்று உணர்த்தப்படுகிறது.

'தழைத்த தண் துளவினேன் தலைவன் அல்லன் என்று
அழைத்தவன், அற நெறி அந்தணாளரில்
பிழைத்தவன், பிழைப்பு இலா மறையைப் பேணலாது,
இழைத்த வன் பொய் எனும் இழுதை நெஞ்சினேன்' [2290]

என்னும் பாடலில் 'துழாய்மாலையை அணிந்த திருமால் தலைவனல்லன் என்று பேசியவன் செல்லும் கதிக்கு நான் செல்லுகிறேன்' என்று பரதன் சபதம் செய்ததாகக் கூறுவதன் மூலம் பரதத்வநிர்ணயம் செய்கிருன் கம்பன்.

"அரனதிகன்" என்னும் கிஷ்கிந்தாகாண்டப்பாடலை இடைச்செருகலல்லவென்றே கொண்டாலும், இது போன்ற நூற்றுக்கணக்கான பாடல்களுக்கு விரோதமில்லாமலே பொருள்கொள்ளவேணும். அப்படிப் பொருள்கொள்ளும் வழியை அப்பாடல் வருமிடத்தில் காட்டுவோம்.

தூய வாசகம் சொன்ன தோன்றலைத்
தீய கானகம் திருவின் நீங்கி முன்
போயினுன் வரக் கண்ட பொம்மலாள்,
ஆய காதலால், அழுது புல்லினுள். [2308]

என்னும் பாடலில் சீதையைத் திரு (லக்ஷ்மீதேவி) என்றே குறிப்பிடுவதும் காணத்தக்கது.

பூத்த நாள் மலர் அயன் ஆதிப் புண்ணியர்
ஏத்து வான் புகழினர், இன்றுகாறும் கூக்
காத்தனர்; பின், ஒரு களைகண் இன்மையால்
நீத்த நீர் உடை கல நீரது ஆகுமால். [2341]

வேத்தவை இருந்த நீர், விமலன் உந்தியில்
பூத்தவன் முதலிய புவியுள் தோன்றினுர்,
முத்தவர் இருக்கவே, முறைமையான் நிலம்
காத்தவர் உளர் எனின் காட்டிக் காண்டிரால். [2347]

என்னும் பாடல்களில் பிரமனைத் தன் உந்தித்தாமரையில் படைத்தவன் திருமாலே என்று காட்டுவதைக் காணலாம்.

மூன்று உலகினுக்கும் ஓர் முதல்வன் ஆய் முதல்
தோன்றினன் இருக்க, யான் மகுடம் சூடுதல்,
சான்றவர் உரைசெயத் தருமம் ஆதலால்,
ஈன்றவள் செய்கையின் இழுக்கு உண்டாகுமோ? [2345]

என்னும் பாடலிலும் மூன்றுலகிற்கும் காரணப்பொருளாயிருக்கும் அத்திருமாலே இராமன் என்று உணர்த்தினுன்.

ஈசன் இவ் உலகினை அழிக்கும் நாள் எழும்
ஓசையின் நிமிர்ந்துளது, ஒல்லென் பேர் ஒலி;
காசையில் கரியவற் காண முண்டு எழும்
ஆசையின் நிமர்ந்தது. அவ் அனிக ராசியே. [2358]

என்னும் பாடலில் சிவன் செய்யும் ஸம்ஹாரத் தொழிலைக் காட்டினான். இந்த ஸம்ஹாரத்தையும் திருமாலால் தூண்டப்பட்டே செய்கிறான் என்பதைப் பல பாடல்களில் உணர்த்துவதையும் கண்டுவருகிறோம்.

குகப்படலம்

சுற்றத்தார் தேவரொடும் தொழ நின்ற
கோசலையைத் தொழுது நோக்கிக்
'கொற்றத்தார்க் குரிசில்! இவர் ஆர்?' என்று
குகன் வினவக் 'கோக்கள் வைகும்
முற்றத்தான் முதல் தேவி, மூன்று உலகும்
ஈன்றானை முன் ஈன்றானைப்
பெற்றத்தால் பெறும் செல்வம் யான்பிறத்த
லால் துறந்த பெரியாள்' என்றான். [2454]

என்னும் பாடலில் மூன்றுலகையும் படைத்த பிரமனையும் ஸ்ருஷ்டி காலத்தில் படைத்த திருமாலே இராமன் என்று பரதன் வாயிலாகக் கூறுகிறான். இப்படி ஒவ்வொருவர் வாயிலாகவும் விஷ்ணுபரத்வநிர்ணயம் செய்யும் பெருமையும், அத்திருமாலே இராமன் என்று கூறும் பெருமையும் வால்மீகிக்கும் இல்லாததாய், கம்பனுக்கேயுரியதான தனிப் பெரும் பெருமையாகும்.

சுடும் மயானத்திடை தன் துணை ஏகத்
தோன்றல் துயர்க் கடலின் ஏகக்,
கடுமை ஆர் கானகத்துக் கருணை ஆர்
கலி ஏகக் கழல் கால் மாயன்
நெடுமையால் அன்று அளந்த உலகு எல்லாம்
தன் மனத்தே நினைந்து செய்யும்

கொடுமையால் அளந்தானை ''யார் இவர்?'
என்று உரை'' என்னக் குரிசில் கூறும். [2458]

என்னும் பாடலில் திருமால் திரிவிக்கிரமனாக உலகனைத்தை யும் அளந்த பரத்வஸௌசக வ்ருந்தாந்தத்தைக் காட்டுகிறான்.

### திருவடி சூட்டு படலம்

வந்த மாதவத்தோனை அம் மைந்தனும்,
தந்தை ஆம் எனத் தாழ்ந்து வணங்கினான்;
இந்து மோலி அன்னானும். இரங்கினான்.
அந்தம் இல் நலத்து ஆசிகள் கூறினான். [2463]

என்னும் பாடலில் தவத்தில் மிக்கவனும், ஞானியுமான பரத்துவாச முனிவனுக்குச் சிவனை உவமையாகக் கூறுவதி லிருந்து, சிவனுக்கும் தவத்தின் மிகுதியும் ஞானப் பெருமையுமே உண்டென்று உணர்த்துகிறான். இதை மற்றும் பல பாடல்களிலும் காணலாம். பரம்பொருட்கே யுரிய பெருமைகள் திருமாலுக்குக் காட்டப்படுவதுபோலே கம்பனால் சிவனுக்குக் காட்டப்படுவதில்லையென்பதையும் காணலாம்.

''அரம் சுட அழல் நிமிர் அலங்கல் வேலினாய்!
விரஞ்சு ஒரு நொடியில், இவ் அனிக வேலையை
உரம் சுடு வடிக்கணை ஒன்றில் வென்று, முப்
புரம் சுடும் ஒருவனின், பொலிவென் யான்'' என்றான்.
[2504]

என்னும் பாடலில் சிவன் அம்பாலே திரிபுரமெரிந்த செயலைப் பாடினான். இதுபோலே அடிமுடிதேடின கதை முதலானவற்றை எங்குமே பாடுவதில்லையென்பது காணத் தக்கது. ''ஆழியாய்'' [2502] ''கார்ப்பொருமேனி அக் கண்ணன்'' [2513] ''கண்ணன் கண்ணெனும் புண்டரீகம்'' [2517] என்று இராமனைப் பல விடங்களில் திருமாலின் அவதாரமென உணர்த்தினான்.

## கம்பனின் சமயம்

"உண்டுகொல் இது அலது உதவி நீ செய்வது?
எண் தகு குணத்தினுய்! தாதை என்றலால்,
புண்டரீகத் தனி முதற்கும் போக்கு அரு
விண்டுவின் உலகிடை விளங்கினுன் அரோ!" [2540]

என்ற பாட்டில் உந்தித்தாமரையில் தோன்றியவனுய், அனைத்துலகையும் படைக்கும் முதல்வனுன நான்முகனுக்கும் செல்ல அரிதாயிருப்பது விஷ்ணுவின் பரமபதம் என்று கூறியிருப்பதொன்றே கம்பன் பரமவைஷ்ணவன் என்று காட்டுகிறது. "ஒக்க நின்று உயிர்தொறும் உணர்வு நல்குவான்" *[2544]* என்று இராமனைக் குறித்தான் கம்பன். "ஒவ்வோர் உயிரினுள்ளும் ஒரே தன்மையாக அமைந்து அறிவை அருளுபவனுன (திருமாலின் அமிசமான) இராமன்" என்று கழகவுரைகாரராலேயே இதற்கு உரையிடப்பட்டது. "முந்தை நான் முகத்தவற்கும் முந்தையான்" *[2553]* என்று மற்ருெரு பாடலில் இராமனை நான்முகனுக்கும் முற்பட்டவனுகக் குறித்தவிடத்திலும், "படைத்தற் கடவுளான நான்முகனை உந்தித்தாமரையினின்றும் தோற்றுவித்தலால்" என்று குறிப்புரை காண்கிறது. "பிறந்து நீயுடைப் பிரிவில் தொல்லறம்" *[2564]* என்னும் அடிக்குக் குறிப்புரையிடும்போது "காத்தற்ருெழிலையுடைய திருமாலின் அவதாரம் இராமன் ஆதலில், உலகையாளும் தொழில் அவனின்றும் பிரிக்க முடியாத தொன்மையான அறமாயிற்று" என்கிருர் கழகவுரையாளர். இப்படிப் பலவிடங்கள் காணலாம். இராமன் சிவனின் அல்லது பிரமனின் அமிசம் என்ருே அவதாரம் என்ருே கழகவுரையாளர்களும் எங்கும் குறிப்பிடுவதில்லை. அப்படிக் குறித்தால் அது கம்பனின் காவியம் முழுவதற்குமே முரண்படும் என்று அவர்களுடைய மனஸ்ஸாக்ஷி எச்சரிக்கிறதுபோலும்! இப்படியிருக்க, பிள்ளையவர்கள் மாத்திரம் மும்மூர்த்திகளின் அவதாரம் இராமன் என்று எழுதுவது தம் மனஸ்ஸாக்ஷியையே மறைத்துக்கொண்டு எழுவதேயாகமுடியும். நிற்க. கம்பன் மற்றும் பல

விடங்களிலும் திருமாலின் அவதாரமே ராமன் என்று காட்டியிருப்பதையும், விஷ்ணு பரத்துவத்தை விளக்கி யிருப்பதையும், தன் மதக்கொள்கையை விவரித்திருப் பதையும் மேலும் காட்டுவோம்.

படம் செய் நாகணைப் பள்ளி நீங்கினன்
இடம் செய் தொல் குலத்து இறைவன் ஆதலால்,
தடம் செய் தேரினன், தானும் நீரினல்
கடம் செய்வான் எனக் கடலின் மூழ்கினன். [2557]

என்னும் பாடலில் ஆதிசேஷசாயியாகிற திருமாலே இராமனாக அவரித்தான் என்று உணர்த்தினன் கம்பன்.

கிளர் அகன் புனலுள் நின்று, அரி, ஓர் கேழல் ஆய்,
இளை எனும் திருவினை ஏந்தினன் அரோ,
உளைவு அரும் பெருமை ஓர் எயிற்றின் உள் புரை
வளர் இளம் பிறையிடை மறு பின் தோன்றவே. [2582]

என்னும் பாடலில், '(ஆதியில்) திருமால், ஒப்பற்றதொரு பன்றிவடிவமெடுத்து அழிதலில்லாத பெருமையையுடைய ஒரு கோரப்பல்லின் உள்ளிடத்தில், வளரும் இளம்பிறைச் சந்திரனிடத்துக் களங்கம்போலக் காணப்படும்படி பொங்குகிற பரந்த கடலினின்றும் இளை என்னும் பெயரை யுடைய திருப்போன்ற பூமிதேவியைத் தூக்கினன்'' என்று கழகப்பொழிப்புரையில் காட்டப்பட்டபடி ஆதி வராஹாவதாரம் கம்பனால் விவரிக்கப்பட்டது.

ஆதிய அமைதியின் இறுதி, ஐம்பெரும்
பூதமும் வெளி ஒழித்து எவையும் புக்கபின்
நாதன் அவ் அகன் புனல் நல்கி, நண்ணரும்
சோதி ஆம் தன்மையின் துயிறல் மேயினன். [2583]

என்னும் அடுத்த பாடலில், "முன் நடந்த அக்கல்பகாலத் தின் முடிவிலே ஐந்து பெரும்பூதங்களும் வெளிவரும் தன்மையை நீக்கி எல்லாத் தத்துவங்களும் (இறைவன் வடிவத்துள்ளே) புகுந்தபின், தலைவனான திருமால் பரந்த

நீரைப்படைத்துப் (பிறர்க்குப்) பொருந்துதற்கு அரிய ஒளியுருவான தன்மையோடு அறிதுயில் செய்தலைப் பொருந்தினுன்'' என்று கழகப் பொழிப்புரை கூறுகிற படியே திருமாலே எல்லாவுலகையும் அழித்துப் படைக்கும் முழுமுதல்வன் என்று காட்டினுன் கம்பன்.

ஏற்ற இத்தன்மையின், அமரர்க்கு இன் அமுது
ஊற்றுடைக் கடல்வணன் உந்தி உந்திய
நூற்று இதழ்க் கமலத்தின், நொய்தின் யாவையும்
தோற்றுவித்து உதவிட, முதல்வன் தோன்றினுன்.
[2584]

என்னும் அடுத்த பாடலில், ''(இங்ஙனம் துயிலுதலை) ஏற்றுக்கொண்ட இந்தத் தன்மையை உடைய தேவர் களுக்கு இனிய அமிர்தத்தைச் சொரிதலையுடைய கடல் போலும் கரிய நிறத்தையுடைய திருமாலினது கொப்பூழ் தோற்றுவித்த நூறு இதழ்களையுடைய தாமரை மலரினின்று (படைப்பிற்கு) முதல்வனுகிய பிரமன் வெளிப்பட்டான்'' என்று கழகப் பொழிப்புரையே கூறுகிற ரீதியிலே நாரா யணனுகிய விஷ்ணுவின் உந்தித்தாமரையிலிருந்து முதன் முதலில் பிரமன் தோன்றிய நிகழ்ச்சியும், ''அன்று அவன் உலகினை அளிக்க'' [2585] என்னும் அடுத்தபாடலில் அப்பிரமனே மற்றுள்ள எல்லா உலகையும் படைத்த செயலும் காட்டப்பட்டன. இவற்றிலிருந்து,

''நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும்
தான்முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான்''

என்னும் ஆழ்வார்களுடைய கொள்கையைத் தழுவிய பரமவைஷ்ணவ சிகாமணியாயிருப்பவன் கம்பன் என்பது கையிலங்கு கனியாக விளங்குகிறது.

வால்மீகி, வியாஸர் முதலான பரம ரிஷிகளாலும்,

''நாபி₄ப்ரரூடா₄ம்பு₃ருஹாஸநேந
ஸம்ஸ்தூயமாந: ப்ரத₂மேந தா₄த்ரா ।

அமும் யுகாந்தோசிதயோகநித்ர:
ஸம்ஹ்ருத்ய லோகாந் புருஷோऽதிஶேதே ॥''
[ரகுவம்ஶம் 13-6]

[தன் உந்தியில் தோன்றிய தாமரையில் இருக்கும் முக்கியனை பிரமனால் துதிக்கப்படுபவனாய், பிரளயகாலத்திற்குரிய அறிதுயிலை உடையவனாய், பரமபுருஷனான விஷ்ணு உலகங்களை அழித்தபின் இக்கடலிலேயே சயனிக்கிறார்.] முதலான ச்லோகங்களிலே காளிதாஸன் முதலான வடமொழிக் கவிஞர்களாலும்,

''நாமவெள்ளத்து நடுவண் தோன்றிய
வாய்மொழி மகனொடு மலர்ந்த தாமரைப்பொகுட்டு''

''வாய்மொழி ஓடை மலர்ந்த
தாமரைப் பூவினுள் பிறந்தோனும்''

என்று சங்கப்பாடல்களிலும்,

'' பெரியவனை மாயவனைப் பேருலகமெல்லாம்
விரிகமல உந்தியுடை விண்ணவனை ''

'' தாதை ஏவலின் மாதுடன் போகிக்
காதலி நீங்கக் கடுந்துயர் உழந்தோன்
வேத முதல்வற் பயந்தோன் என்பது
நீயறிந்திலையோ நெடுமொழியன்றோ ''

என்று சிலப்பதிகாரத்திலும்,

'' ஆதிமால் அமலன் நாபிகமலத்(து) அயனுதித்து''

என்று கலிங்கத்துப் பரணியிலும், மற்றும் கவிகள் என்று பெயர்படைத்த அத்தனை கவிஞர்களாலும் நாராயணனே நான்முகனைப் படைத்தவன் என்று பாடப்பட்டிருக்க, பரமவைஷ்ணவனான கம்பன் வேறுவிதமாகப் பாடச் சிறிதும் இடமுண்டோ? படைக்கப்பட்டவனான பிரமனும், படைத்தவனான திருமாலும் சேர்ந்து இராமனாகப் பிறந்தனர் என்று கம்பன் கனவிலும் கருதியிருக்கமுடியுமோ?

திருவடி சூட்டு படலம் முற்றிற்று.
அயோத்தியா காண்டம் முற்றுப்பெற்றது.

# கம்பனின் சமயம்

ஆரணிய காண்டம்

பேதியாது நிமிர் பேத உருவம் பிறழ்கிலா,
ஓதி ஓதி உணருந்தொறும் உணர்ச்சி உதவும்,
வேதம் வேதியர் விரிஞ்சன்முதலோர் தெரிகிலா,
ஆதி நாதர் அவர் எம் அறிவினுக்கு அறிவு அரோ.
[2605]

என்னும் கடவுள் வாழ்த்துப் பாடலில் விரிஞ்சன் எனப் படும் பிரமனுலும் அறியப்படாதவன் ஆதிநாதனுகிற திருமால் என்று கூறுகையாலே கம்பன் திரிமூர்த்தி ஸாம்ய வாதியோ ஐக்யவாதியோ அல்லர் என்று விளங்குகிறது.

விராதன் வதைப்படலம்

"குமரர்! நீர் இவண் அடைந்து உதவு கொள்கை எளிதோ?
அமரர் யாவரோடும் எவ்வுலகும் வந்த அளவோ?
எமரின் யார் தவம் முயன்றனர்கள்?" என்று உருகினன்,
தமர் எலாம் வர உவந்தனைய தன்மை முனிவன். [2608]

என்னும் பாடலின் கழகக்குறிப்புரையில், "எல்லாவுலகங்களினும் மேம்பட்ட அழியாத வீட்டுலகில் வாழும் தேவதேவனான இறைவனும் தேவியும் அவரை அகலாது எல்லாப் பணியும்புரியும் ஆதிசேடனுமே இராமனுகவும், சீதாபிராட்டியாகவும், இலக்குவனுகவும் தோன்றியுள்ளாராதலின் அவர் வரவு எல்லாத் தேவரும் எல்லாவுலகும் எதிர்ப்பட்ட நிலையினும் பெரிதாயிற்று" என்று எழுதியிருப்பதொன்றே கம்பன் பரமவைஷ்ணவன் என்று காட்டும்.

ஓம் அ ராமரை, ஒருங்கும் உணர்வோர் உணர்வுறும்
நாமர் ஆம் அவரை, நல அறம் நிறுத்த நணுகித்
தாம் அரா அணை துறந்து தரை நின்றவரை, ஓர்
மா மராமரம் இறுத்து, அதுகொடு எற்ற வரலும். [2635]

என்னும் பாடலில் பிரணவத்தின் பொருளாய் விளங்கும் அராவணைத்துயில்பவனே ராமனாய் அவதரித்தவன் என்று அவதாரரஹஸ்யத்தையும் காட்டிப் பரதத்துவ நிர்ணயம் செய்கிருன் கம்பன்.

சுவண வண்ணனெடு கண்ணன் மிசைகொள்ள. இசைதோய்
அவண விண்ணிடை எழுந்து. படர்கின்றவன். அறம்
சிவண. அன்ன சிறைமுன் அவரொடு ஏகு செலவத்து
உவணன் என்னும் நெடும் மன்னவனும் ஒத்தனன் அரோ.
[2642]

என்னும் பாடலில் கண்ணனென்றே இராமனைக் குறித்து. விராதனின் மேலிருந்த ராமலக்ஷ்மணர்களை பாணஸுர யுத்தத்தில் கருடன்மேல் ஏறிப்பொருத க்ருஷ்ணபலராமர்களாகவே கூறுவதும் கம்பனின் சமயக்கொள்கையையும். அவதாரக் கொள்கையையும் உணர்த்துகிறது. அடுத்து வரும் ஒரு பாடலில் "ஊழி முதல்வன்" [2645] என்று இராமபிரானைக் கூறி.

பட்ட தன்மையும் உணர்ந்து, படர் சாபம் இட முன்
கட்ட வன் பிறவி தந்த கடைஆன உடல் தான்
விட்டு. விண்ணிடை விளங்கினன்; விரிஞ்சன் என ஓர்
முட்டை தந்து. அதனின் வந்த முதல் முன்னவனினே.
[2650]

என்னும் பாடலில் பிரமன் திருமாலால் படைக்கப்பட்டவனே என்று உணர்த்துவதும் காணத்தக்கது. 2652 முதல் 2665 முடியவுள்ள விராதனின் துதியில் கம்பன் தன் சமயக் கொள்கையைத் தெளிவாகக் காட்டியிருப்பதைக் காண்போமினி.

வேதங்கள் அறைகின்ற உலகு எங்கும் விரிந்தன உன்
பாதங்கள் இவை என்னில், படிவங்கள் எப்படியோ!
ஓதம் கொள் கடல் அன்றி. ஒன்றினேடு ஒன்று ஒவ்வாப்
பூதங்கள் தொறும் உறைந்தால் அவை உன்னைப் பொறுக்குமோ.
[2652]

என்னும் பாடலில் உலகெல்லாவற்றையும் திரிவிக்கிரமனுய் அளந்த திருமாலே இராமன் என்றும். அவனே வேதங்களிற் சொல்லப்படும் ஸர்வவ்யாபியான பரம்பொருள் என்றும் காட்டினுன் கம்பன்.

கடுத்த கராம் கதுவ, நிமிர்
கை எடுத்து மெய் கலங்கி
உடுத்த திசை அனைத்தினும் சென்று
ஒலி கொள்ள, உறு துயரால்
'அடுத்த பெருந் தனி மூலத்து
அரும்பரமே! பரமே!' என்று
எடுத்து, ஒரு வாரணம் அழைப்ப,
நீயோ அன்று 'ஏன்?' என்றாய். [2653]

என்னும் பாடலில் பரதத்துவம் யாரென்று ஐயந்திரிபற நிரூபிக்கும் கஜேந்திர விருத்தாந்தத்தை விளக்குகையில் 'அடுத்த பெரும் தனி மூலத்து அரும் பரமே! பரமே!' என்று கஜேந்திரன் பொதுப்படையாக எல்லாவற்றிலும் எக்காலத்திலும் எல்லாவிதத்திலும் உயர்ந்த மூலப்பொருளைக் கூப்பிட்டபோது நீயல்லவோ ஏனென்று சென்று இடர் நீக்கினாய் என்று வினவுவதன் மூலம் ஆதிமூலப்பொருள் திருமாலே என்று ஐயந்திரிபறக்காட்டுகிறான்.

புறம் காண அகம் காணப் பொது முகத்தின் அருள் நோக்கம்
இறங்காத தாமரைக் கண் எம்பெருமாஅன்! இயம்புதியால்;
அறம் காத்தற்கு உனக்கு ஒருவர் ஆரும் ஒரு துணை இன்றிக்
கறங்கு ஆகும் எனத் திரிய நீயேயோ கடவாய்! தான்
[2654]

என்னும் பாடலில் 'தாமரைக்கண் எம்பெருமான்!' என்று விளிப்பதன் மூலம் திருமாலே இராமன் என்று காட்டி, கருணைகடாக்ஷத்தில் குறையாதவனும், எவருடைய துணையுமின்றி அறம் காக்கின்றவனுமான பரம்பொருள் அவனே என உத்கோஷித்தான்.

துறப்பதே தொழில் ஆகத் தோன்றினோர் தோன்றியக்கால்,
மறப்பரோ தம்மை? அது அன்றாகி, மற்றவர்போல்
பிறப்பரோ? எவர்க்கும் தாம் பெற்ற பதம் பெறல் அரிதோ?
இறப்பதே பிறப்பதே எனும் விளையாட்டு இனிது உகந்தோய்!
[2655]

என்னும் பாடலில் பரம்பொருளே துஷ்டநிக்ரஹம் செய்வதற்காகத் தன் இச்சையாலே இராமனாகத் தோன்றியிருக்கிறான் என்று உரைப்பதன் மூலம் இவனுக்குப் பிறப்பால் வரும் தாழ்வுகள் இல்லையென்று உணர்த்தினான்.

பனி நின்ற பெரும் பிறவிக் கடல் கடக்கும் படி பற்றி
நனி நின்ற சமயத்தோர் எல்லாரும் 'நன்று' என்னத்
தனி நின்ற தத்துவத்தின் தகை மூர்த்தி நீ ஆகில்
இனி நின்ற முதல் தேவர் என்கொண்டு என்செய்வாரே?
[2656]

என்னும் பாடலில் எல்லாச் சமயத்தினரும் இத்திருமாலுடைய ரூபகுணசேஷ்டிதங்களே நல்லவையென்று தங்களையும் மீறி ஒப்புக்கொள்ளவேண்டியிருக்கிறதென்றும், இவனே ஒப்பற்று விளங்கும் பரதத்துவமூர்த்தியென்றும், தாங்களே பெருந்தேவர் என்று தாமும் பறைசாற்றிக் கொண்டு, பிறரையும் பறைசாற்ற வைக்கும் மற்ற தேவர்கள் ஒரு தகுதியையும் உடையவரல்லரென்றும், (திருமால் அருளாவிடில்) ஒன்றையும் செய்யவல்லவர்களல்லரென்றும் காட்டினான். "பிறதேவர் எத்தகுதியால் யாது செய்ய வல்லார். அவரால் ஒரு பயனும் இல்லை-என விரித்துரைத்துக் கொள்ளல் தரும்" என்று கழகக் குறிப்புரையும் கூறுகிறது. இவ்வொருபாடலே கம்பன் பரமவைஷ்ணவன் என்று காட்டித்தரும்.

ஓயாத மலர் அயனே முதல் ஆக உளர் ஆகி,
மாயாத வானவர்க்கும் மற்று ஒழிந்த மன் உயிர்க்கும்
நீ ஆதி முதல் தாதை, நெறி முறையால் ஈன்று எடுத்த
தாய் ஆவார் யாவரே? தருமத்தின் தனி மூர்த்தி! [2657]

என்னும் பாடலில் பிரமன் முதலான எல்லா தேவர்களுக்கும் எல்லா உயிர்களுக்கும் தந்தையாகவும் தாயாகவுமிருக்கும் முழுமுதற்காரணன் அத்திருமாலே என்று கோஷித்தான்.

## கம்பனின் சமயம்

நீ ஆதி பரம்பரமும்; நின்னவே உலகங்கள்;
ஆயாத சமயமும் நின் அடியவே; அயல் இல்லை;
தீயாரின் ஒளித்தியால். வெளி நின்றால் தீங்கு உண்டோ?
வீயாத பெரு மாய விளையாட்டும் வேண்டுமோ? [2658]

என்னும் பாடலில் இத்திருமாலே மேலான பரம்பொருள் என்றும். எல்லா உலகங்களும் அவனுடைய உடைமையே என்றும். அவனுடைய இயல்புகளை ஆராயாத புறமதங்களும் அவனுடைய அடியாரான தேவர்களைப் புகழ்கின்றவையாகையாலே, உண்மையில் அவனுடைய அடிகளைப் பற்றிப் பேசுகின்றவையே என்றும். தீயகருமங்களைச் செய்தவர்களான புறமதத்தவர்களுக்குக் கர்மாநுகுணமாகப் பலனளிப்பதற்காக அவர்களுக்கு மறைந்து நிற்கிறான் அவன் என்றும் கூறுவதன் மூலம் உண்மையான வைதிகமதம் வைஷ்ணவமதமே என்றும், மற்ற மதங்கள் தீக்கருமங்களைச் செய்தவர்களுக்காக அவனாலேயே ஏற்படுத்தப்பட்டவையே என்றும் விளக்கினான். இவ்வொரு பாடலே கம்பன் பரம வைஷ்ணவன் என்று காட்டும்.

தாய் தன்னை அறியாத கன்று இல்லை; தன் கன்றை
ஆயும் அறியும்; உலகின் தாயாகின். ஐய!
நீ அறிதி எப்பொருளும்; அவை உன்னை நிலை அறியா;
மாயை இது என்கொலோ? வாராதே வரவல்லாய்!
[2659]

என்னும் பாடலில். முன் பாடலில் சொன்ன கருத்தையே விவரித்துக்கொண்டு. அத்திருமாலே ஸர்வஜ்ஞன் என்றும், மற்ற எவரும் எல்லாமறிந்தவரல்லரென்றும் விளக்கினான். "வாராதாய் போல் வருவானே!" [திருவாய் 6-10-9] என்ற திருவாய்மொழியை அடியொற்றி இராமனை 'வாராதே வரவல்லாய்!' என்று விளித்தான்.

'பன்னல் ஆம்' என்று உலகம். பலபலவும் நினையுமால்;
உன் அலால் பெருந்தெய்வம் உயர்ந்துளோர் ஒழுக்கன்றே;
அன்னவூர்தியை முதலாம் அந்தணர்மாட்டு அருந்தெய்வம்
நின் அலால் இல்லாமை நெறி நின்றார் நினையாரோ.[2660]

என்னும் பாடலில், "உலகம் பல தெய்வங்களையும் துதித்து வழிபடுதல் பொருந்தும் என்று நினையும்; (ஆயினும்), அன்னத்தை ஊர்பவனான பிரமனைத் தலைவனாகக் கொண்ட அந்தணரிடம் (அவர்களால் வணங்கப்படும்) சிறந்த தெய்வ மாக நின்னையொழிய வேறு தெய்வம் இல்லை என்பதை நன்னெறியினின்று பிறழாத மேலோர் அறிவர்; ஆதலால், உன்னையன்றி வேறொரு பெருந்தெய்வம் உளது என்று கொள்ளுதல் அம்மேலோருடைய நடைமுறையன்று" என்று கழகப்பொழிப்புரையே கூறுகின்றபடி உலகத்தினர் பல பல தெய்வங்களைத் தொழுவது முறையற்றது என்றும் உயர்ந்தவர்கள் திருமாலைத் தவிர வேறு தெய்வத்தைத் தொழமாட்டார்கள் என்றும், பிரமன் முதலான அந்தணர் தலைவர்க்கும் திருமால் ஒருவனே தெய்வம் என்றும், வைஷ்ணவ ஸித்தாந்தத்தின் ஸாரத்தைப் பிழிந்து கொடுக் கிறான் கம்பன். இவ்வொரு பாடலே கம்பன் பரமவைஷ்ண வன் என்று விளக்கவல்லது.

பொரு அரிய சமயங்கள் புகல்கின்ற புத்தேளிர்,
இரு வினையும் உடையார்போல் அருந்தவம் நின்று இயற்றுவார்
திரு உறையும் மணிமார்ப! நினக்கு என்னே செயற்பால?
ஒரு வினையும் இல்லார்போல் உறங்குதியால் உறங்காதாய்!
[2661]

என்னும் பாடலில், "திருமகள் நீங்காது தங்கிய அழகிய மார்பையுடையவனே! (அறிவாற்றல்கள்) ஒடுங்காதவனே!! ஒன்றுடனொன்று ஒவ்வாத புறச்சமயங்கள் கூறும் கடவுளர் இரு வினைகளையும் உடைய மக்களைப்போலச் செயற்கரிய தவத்தை ஒழியாது செய்வர்; உனக்கோ செய்யத்தக்கது ஒன்றுமில்லை; ஆதலால், செய்யத்தக்க செயல் யாதொன்றும் இல்லாதவரைப்போலே உறங்குகிறாய்" என்று கழகப்பொழிப்புரையே கூறுகிறபடி மற்ற சமயங் கள் பரம் பொருளாகக் கூறும் சிவன் முதலான தேவர் கள் புண்யபாபங்களையுடைய நம்மைப்போன்ற ஜீவர்களைப் போலே தவம் செய்கின்றார்கள் என்றும், திருமால் ஒருவ னுக்கே செய்யத்தக்கது ஒன்றுமில்லையென்றும், திருமகள்

நீங்காத திருமார்பையுடைய அவனே பரம்பொருளாயிருக்க முடியுமென்றும் கோஷிக்கிறன். இவ்வொரு பாடலே கம்பனின் சமயக்கொள்கையைக் கையிலங்குகனியாகக் காட்டிக்கரவல்லது.

அரவு ஆகிச் சுமத்தியால், அயில் எயிற்றின் ஏந்துதியால்,
ஒரு வாயின் விழுங்குதியால், ஓர் அடியால் ஒளித்தியால்,
திரு ஆன நிலமகளை; இஃது அறிந்தால் சீறுளோ?
மரு ஆரும் துழாய் அலங்கல் மணிமார்பின் வைகுவாள். [2662]

என்னும் பாடலில், பூமியைப் படைத்து இடந்து உண்டு உமிழ்ந்து அளந்து அளிப்பது முதலான எல்லாச் செயல்களையும் செய்கையாலே திருமாலே ஸர்வலோகநாதனுயிருக்கத்தக்கவன் என்று உணர்த்துகிறன். இத்தனை பாடல்களைக் கண்டபின்பும் சிவனும் பரம்பொருளாயிருக்கலாமே என்று சிலர் கலங்கக் கூடும். அவர்களுடைய கலக்கத்தைத் தெளிவிப்பதற்காகவே,

மெய்யைத்தான் சிறிது உணர்ந்து நீ விதித்த மன்னுயிர்கள்
உய்யத்தான் ஆகாதோ? உனக்கு என்ன குறை உண்டோ?
வையத்தார் வானத்தார் மழு ஆளிக்கு அன்று அளித்த
ஐயத்தால் சிறிது ஐயம் தவிர்ந்தாரும் உளர். ஐயா! [2663]

என்னும் பாடலில், "ஐயா! உன்னுல் படைக்கப்பட்ட நிலைபேறுடைய உயிர்கள், (நீயே பரம்பொருள்) என்கிற உண்மையைச் சிறிது தெரிந்து உய்தல் கூடாதோ? (அவர்கள் அவ்வாறு உய்ந்தால்) உனக்கு என்ன குறை உண்டாகும்? மழுப்படையை உடைய சிவபெருமானுக்கு அக்காலத்து நீ இட்ட பிச்சையால் மண்ணுலகத்தாருள்ளும், விண்ணுலகத்தாருள்ளும் சிறிது ஐயம் நீங்கினவரும் உண்டு" என்று கழகப்பொழிப்புரையும், "ஐயந் தவிர்ந்தாரும் உளர் என்றதனுல் ஐயந் தவிராதாரும் உண்மை பெறப்படும். இதனுல் எல்லாஉயிர்களும் ஐயம் முழுதும் நீங்கி நீயே பரம்பொருள் என்று தெளிந்து உய்ய அருளவேண்டும் என்று அறிவுவந்தநிலையில் உயிர்களின் துன்பங்கண்டு வீராதன் இரங்கிக் கூறியவாறு" என்று கழகக் குறிப்புரையும்

கூறுகின்றபடி அறிவு மலர்ந்த நிலையில் உள்ளவர்களே சிவனைக்காட்டிலும் மேலான பரம்பொருள் திருமால் என்று உணர்ந்து உய்வார்கள் என்று உத்கோஷித்தான் கம்ப நாட்டாழ்வான். இவ்வொரு பாடலின் பிற்பகுதியொன்றே கம்பன் மறந்தும் புறந்தொழாத பரமவைஷ்ணவசிகாமணி யென்பதைச் சிறுவர்க்கும் காட்டும்.

அன்னம் ஆய் அருமறைகள் அறைந்தாய் நீ. அவை உன்னை
முன்னம் ஆர் ஓதுவித்தார்? எல்லாரும் முடிந்தாரோ?
பின்னம் ஆய் ஒன்றுதல். பிரிந்தேயோ? பிரியாதோ?
என்ன மா மாயம் இவை ஏனமாய் மண் இடந்தாய்! [2664]

என்னும் பாடலில் வராகமாகிப் பூமியை இடந்தவனும். அன்னமாய் வேதங்களை ஓதியவனுமான திருமாலே இராமன் என்று காட்டி. அவனுக்கு வேதமோது வித்தவர் எவருமில்லை என்று உத்கோஷிப்பதன் மூலம் அவனே முழுமுதல்வன் என்று விளக்கி. பிற்பகுதியாலே தான் விசிஷ்டாத்வைதியென்பதையும் உணர்த்தினன்.

ஒப்பு இறையும் பெறல் அரிய
ஒருவா! முன் உவந்து உறையும்
அப்பு உறையுள் துறந்து, அடியேன்
அருந்தவத்தால் அணுகுதலால்,
இப் பிறவிக் கடல் கடந்தேன்;
இனிப் பிறவேன்; இரு வினையும்
துப்பு உறமும் நீர்த்த சுடர்த்
திருவடியால் துடைத்தாய் நீ. [2665]

என்னும் பாடலில் இத்திருமாலே ஒப்பாரில்லாதவன் என்றும் எல்லா வினைகளையும். பிறவிக்கடலையும் போக்கவல்லவன் என்றும் பறைசாற்றுவதன் மூலம் இவனே பரம்பொருள் என்று தெளிவு படுத்தினன். இவ்விராதன் துதியிலுள்ள ஒவ்வொரு பாடலும் திருமாலே பரம்பொருளென்று கையிற்கனியென்னக் காட்டாநிற்க, இவற்றைக் காணுமலோ, கண்டும் மறந்துவைத்தோ, மறைக்க எண்ணியோ, பிள்ளையவர்கள் கம்பன் திரிமூர்த்தி சாம்யவாதி என்று எழுதியது கலியின் கோலாஹலமேயாகும்.





அன்ன யக்கன், ஆதியாய்!
இன்னல் தீரும் ஈகையான்
நின்ன தாளின் நீங்கும் என்று
உன்னும் எற்கு உணர்த்தினுன். [2671]

என்னும் பாடலில் இராமனை "ஆதியாய்" [எவர்க்கும் முன்னேனே] என்று குறிப்பிட்டு அவனுடைய தாளின் ஸ்பரிசத்தாலேயே விராதனின் அரக்கப்பிறவி நீங்கும் என்னும் சாபவிமோசனவழியையும் காட்டினுன்.

அன்று மூலம்! ஆதியா
இன்று காறும் ஏழையேன்.
நன்று தீது நாடலேன்,
நின்று தீய நேடினேன். [2673]

என்னும் பாடலில் இராமனை ஆதிமூலம் என்றும்,

தூண்ட நின்ற தொன்மைதான்
வேண்ட நின்ற வேதநூல்
பூண்ட நின் பொலம் கொள் தாள்
தீண்ட இன்று தேறினேன். [2674]

என்னும் அடுத்த பாடலில், தன் மயக்கத்தைத் தெளிவித்த இராமனின் திருவடிகள் வேதத்திற்கு அலங்காரமாயிருப்பவை என்றும்,

திறத்தின் வந்து தீது எலாம்
அறுத்த உன்னை ஆதனேன்
ஒறுத்த தன்மை ஊழியாய்!
பொறுத்தி என்று போயினுன். [2675]

என்னும் அடுத்த பாடலில் அவனே ஊழி முதல்வன் என்றும் கூறி,

'தேவு காதல் சிரியோன்
ஆவி போயினுன்' எனுப்

பூ உலாவு பூவையோடு
ஏ வலாரும் ஏகினர். [2676]

என்னும் அடுத்த பாடலில் அவனே லக்ஷ்மீ நாதன் என்று உணர்த்தினன்.

சரபங்கன் பிறப்பு நீங்கு படலம்

சரபங்கமஹர்ஷிக்குப் பிரமன் தன் உலகைக் கொடுப்பதாக இந்திரன் மூலம் சொல்லியனுப்ப,

சொல் பொங்கு பெரும் புகழோய்! தொழில் மாய்
சிற்பங்களின் வீவன சேர்குவெனே?
அற்பம் கருதேன் என் அருந்தவமோ
கற்பம் பல சென்றது காணுதி ஆல்! [2695]

என்னும் பாடலில் சரபங்கமஹரிஷி அப்பிரமனுலகம் அற்பமானதாகவும் அழியக்கூடியதாகவுமிருக்கையாலே அதைத் தான் விரும்பவில்லை என்று கூறி,

சிறு காலை இலா, நிலையோ திரியா,
குறுகா, நெடுகா, குணம் வேறுபடா
உறு கால் கிளர் பூதம் எலாம் உகினும்,
மறுகா நெறி எய்துவென்; வானுடையாய்! [2697]

என்னும் பாடலில் அப்பிரமனுடைய உலகத்திலும் மேம்பட்டதாய், அழியாததாய், சுத்த ஸத்வமயமானதாய், மிகச்சிறந்ததான பரமபதத்தையே அடைவேன் என்று உரைத்து, பின்வரும் பாடல்களில் இராமனுடைய அருளாலே அப்பரமபதத்தை அடைந்தார் என்று உணர்த்துவதிலிருந்து கம்பன் திரிமூர்த்திகளில் ஒருவனான பிரமனைப் பரம்பொருளாகக் கருதவில்லையென்றும், அவனையும் படைத்த திருமாலையே பரம்பொருளாகக் கருதினன் என்றும் விளங்குகிறது. பிரமனால் படைக்கப்பட்ட சிவன் முதலானாரைப் பரம்பொருளாக அவன் கருதியிருக்கவேயிடமில்லையென்பது சொல்லாமலே விளங்கும்.

கண் தாம் அவை ஆயிரமும் கதுவக்
கண் தாமரை போல் கரு ஞாயிறு எனக்
கண்டான் இமையோர் இறை காசினியின்
கண் தான் அரும் நான்மறையின் கனியை. [2701]

என்னும் பாடலில் அரு நான்மறையின் கனியான திருமாலின் அவதாரமாகிய இராகவனை இந்திரன் கண்டான் என்றுகூறி,

காணு மனம் நொந்து கவன்றனன் ஆல்,
ஆள் நாதனை அந்தணர் நாயகனை
நாள் நாளும் வணங்கிய நல் முடியால்
தூண் ஆகிய தோள் கொடு அவற்றொழுவான்.
[2702]

என்னும் பாடலில், ஆளும் தொழிலை உடையவனும், அந்தணர்களுக்கு நாயகனுமான அத்திருமாலை நாடோறும் வணங்கிய தன் நல்ல முடியாலும், கைகளாலும் இராமனைத் தொழுதான் இந்திரன் என்று கூறினன் கவிஞன். மேல் வரும் ஆறு பாடல்களிலே இந்திரன் இராமனைத் துதித் திருக்கும் பெற்றியைக் கழகப்பொழிப்புரையைக் கொண்டே காண்போமினி.

துவசம் ஆர் தொல் அமருள் துன்னுரைச் செற்றும்
சுருதிப் பெருங் கடலின் சொல் பொருள் கற்பித்தும்
திவசம் ஆம் நல் அறத்தின் செம் நெறியின் உய்த்தும்
திரு அளித்தும் வீடு அளித்தும் சிங்காமைத் தங்கள்
கவசமாய் ஆருயிராய்க் கண்ணாய் மெய்த் தவமாய்க்
கடை இலா ஞானமாய்க் காப்பானைக் காணு
அவசமாய்ச் சிந்தை அழிந்து அயலே நின்றான்
அறியாதான் போல அறிந்த எலாம் சொல்வான்.
[2703]

[கொடி நெருங்கிய தொன்மையான போரின்கண் பகைவரைத் தொலைத்தும், பெரிய கடல் போன்ற மறைகளின் சொல்லையும் பொருளையும் அறிவித்தும், நாடோறும் செய்

தற்குரியதாகிய—நன்மை பயக்கும்—அறத்தின் செவ்விய வழியிற் செலுத்தியும், செல்வத்தை ஈந்தும், வீட்டினைப் பயந்தும், அழியாவாறு தங்களைக் கவசமாகவும் அரிய உயிராகவும், கல்வியறிவாகவும் உண்மைத் தவமாகவும் ஈறில்லாத (மெய்) அறிவாகவும் (இருந்து) காக்கின்ற (வனும் ஆகிய பரம்பொருளாயிருந்தும், கொண்டுள்ள வடிவத்திற்கேற்ப) அறியாதவன் போல் பக்கத்திலிருப் பவனைக் கண்டு, தன்வயமற்றுச் சிந்தை தளர்ந்து (அவனைப் பற்றித் தான்) அறிந்துகொண்டவற்றை முழுவதும் சொல்பவனானான்.]

தோய்ந்தும் பொருள் அனைத்தும் தோயாது நின்ற
சுடரே! தொடக்கு அறுத்தோர் சுற்றமே! பற்றி,
நீந்த அரிய நெடுங் கருணைக்கு எல்லாம்
நிலயமே! வேதநெறி முறையின் நேடி
ஆய்ந்த உணர்வின் உணர்வே! பகையால்
அலைப்புண்டு அடியேம் அடிபோற்ற, அந்நாள்
ஈந்த வரம் உதவ எய்தினையே! எந்தாய்!
இரு நிலத்தவோ நின் இணை அடித் தாமரை? தாம்.

[2704]

[எல்லாப் பொருளிலும் கலந்திருந்தும் கலவாது நிற்கும் ஒளியே! (உன்னையே சுற்றமாகப்) பற்றிக்கொண்டு (உடற்றொடர்புடையார் மாட்டுப்) பற்றை நீக்கிக் கொண்டாரின் உறவே! கரை காணுதற்கியலாத மிக்க கருணையனைத்திற்கும் உறைவிடமே! மறை (வகுத்த) வழி யின் முறையிலே தேடி ஆராய்ந்துபெற்ற உணர்வு கொண்டு உணரத் தக்கவனே! அடியவர்களாகிய யாம் பகைவரால் நலியப்பட்டு, திருவடிகளை ஏத்த, அந்நாளில் (எங்களுக்குக்) கொடுத்த வரத்தின்படி உதவிபுரிய (பரம பதத்தை விட்டு நிலவுலகத்துக்கு) வந்தருளினையே! எந் தையே! உன் தாமரை போன்ற இருதிருவடிகளும், கரிய அஞ்ஞானமிக்க நிலவுலகத்துப் பொருந்தத்தக்கனவோ?]

# கம்பனின் சமயம்

மேவாதவர் இல்லை, மேவினரும் இல்லை,
வெளியோடு இருள் இல்லை, மேல் கீழும் இல்லை,
மூவாமை இல்லை, மூத்தமையும் இல்லை,
முதல் இடையோடு ஈறு இல்லை, முன்னெடு பின் இல்லை,
தேவா இங்கு இவ்வோ நின் தொன்று நிலை என்றல்,
சிலை ஏந்தி வந்து எம்மைச் சேவடிகள் நோவக்
காவாது ஒழியின் பழி பெரியதோ அன்றேல்
கருங் கடலில் கண்வளராய்! கைம்மாறும் உண்டோ?
[2705]

[பெரிய கடலிடை அறிதுயில் கொள்ளும் தேவனே! (உனக்குப்) பகைவர் இல்லை, நண்பரும் இல்லை, (உன் உலகத்தில் சூரிய சந்திரர்களின் தோற்ற மறைவு காரண மான) ஒளியும் இருளும் இல்லை. (உன் திருமேனி எங்கும் நிறைந்து வியாபித்துளதால் அதற்கு) மேல்புறமும் கீழ்ப் புறமும் இல்லை. (உனக்கு) இளமையுமில்லை; முதுமையு மில்லை; முதலும் இடையும் இறுதியும் இல்லை; முன்னும் பின்னும் இல்லை. உனது (அவதாரத்துக்கு முந்திய) பழைய நிலை இதுவாயின். வில்லெடுத்து, சிவந்த திருவடி கள் நோகும்படி வந்து எங்களைக் காக்காமற் போனல் (உனக்கு எய்தும்) பழி பெரியதாமோ? அல்லது (எங்களைப் புரத்தலால் நீ பெறும்) எதிருதவியும் உண்டோ?]

நாழி நவை தீர் உலகு எலாம் ஆக,
நளினத்து நீ தந்த நான்முகனுர் தாமே,
ஊழி பல பலவும் நின்று அளந்தால், ஒன்றும்
உலவாப் பெருங்குணத்த உத்தமனே! மேல் நாள்,
தாழி தரை ஆகத் தண் தயிர் நீர் ஆகத்
தடவரையே மத்து ஆகத் தாமரைக்கை நோவ,
ஆழி கடைந்து அமுதம் எங்களுக்கே ஈந்தாய்;
அவுணர்கள் தாம் நின் அடிமை அல்லாமை உண்டோ?
[2706]

['நீ (உன் திருவுந்தித்) தாமரையில் தோற்றுவித்த பிரம தேவன் தானும், உலகனைத்தையும் குற்ற நீங்கிய அளவு கருவியாகக் கொண்டு பற்பல கற்பகால முழுதும் தொடர்ந்து அளந்தாலும், (நின் கணக்கற்ற குணங்களுள்) ஒரு குணமும் (அளவிட்டு) முடியாத மிக்க குணமுடைய மேலோனே! முற்காலத்தில் நிலம் (தயிர்த்) தாழியாகவும் தண்ணீர் தயிராகவும் பெரிய மலையே மத்தாகவும் (செய்து) தாமரை மலர்போன்ற (உன்) கை நோகுமாறு கடலைக் கடைந்து (அதினின்றும் தோன்றிய) அமுதத்தை எங்கருக்கே கொடுத்தாய்; அசுரர் உன் அடியராகாமை உளதோ?']

'ஒன்று ஆகி முலத்து உருவம் பல ஆகி
உணர்வும் உயிரும் பிறிது ஆகி ஊழி
சென்று ஆசு அறும் காலத்து அந்நிலையது ஆகித்
திறத்து உலகம் தான் ஆகிச் செஞ்செவே நின்ற
நன்று ஆய ஞானத் தனிக்கொழுந்தே! நங்கள்
நலைவ தீர்க்கும் நாயகமே! நல்வினையே நோக்கி
நின்றாரைக் காத்தி அயலோரைக் காய்தி
நிலை இல்லாத் தீவினையும் நீ தந்தது அன்றே?' [2707]

['முதலில் ஒன்றாக இருந்து, (பின்பு) பல வடிவங்களாகி (அவ்வடிவங்களில்) அறிவும் உயிரும் வெவ்வேறாகி, பல காலம் கடந்து முடிவுறுங்காலத்து, அந்த (முதல்) நிலையிலுள்ளவாறாகி, (மீண்டும் படைக்குங்கால்) பலவகைப் பட்ட உலகமாகி, மிகவும் செம்மையாய் நின்ற நல்ல அறிவின் ஒப்பற்ற கொழுந்தே! எங்கள் குறையினைப் போக்கும் தலைவனே! நற்கருமங்களையே கருதி நிற்பவரைக் காக்கின்றாய்; (அவ்வாறன்றித் தீய செயல்களை நோக்கும்) மற்றவர்களை அழிக்கின்றாய்; நிலைத்தல் அற்ற தீச்செயலும் நீ படைத்ததன்றோ?']

'வல்லை வரம்பு இல்லாத மாயவினைதன்னால்
மயங்கினரோடு எய்தி, மதிமயங்கி, மேல் நாள்,

அல்லே இறையவன் நீ ஆதி எனப் பேதுற்று
அலமருவேம், முன்னே அறப்பயன் உண்டாக,
'எல்லே வலயங்கள் நின்னுழை' என்று, அந்நாள்,
எரியோனேத் தீண்டி எழுவர் என நின்ற
தொல்லே முதல் முனிவர் சூளுற்றபோதே
தொகை நின்ற ஐயம் துடைத்திலேயோ? எந்தாய்!'
[2708]

['எந்தையே! முன்னொரு காலத்தில், வலிமை வாய்ந்த எல்லேயற்ற மாய வினையினுல், நீயே முதற்கடவுள் என்றும், (நீ முதற்கடவுள்) அல்லே என்றும் (இரு பிரிவினராக) வேறுபட்டு இரண்டனுள் ஒன்றைத் தெளியாதவரோடு (சேர்ந்து) அறிவு கலங்கி வந்து தடுமாறுகின்ற எங்கள் முன்னர், பண்டைய நல்வினைப்பயன் தோன்ற, அக்காலத்து, 'எல்லேகளுடன் கூடிய உலகங்கள் நின்னிடத்தே உள்ளன' என்று எழுவர் என்று நிலே பெற்ற, பழைய, முதன்மை வாய்ந்த முனிவர், தீயைத் தொட்டுச் சூளுறவு செய்த பொழுதே (முன்னர்) தொக்குநின்ற ஐயுறவினைத் தீர்த்தனேயல்லேயோ?]

இவ்வாறு பாடல்களில் கூறப்படும் விஷயங்கள் பின் வருமாறு:—(1) திருமாலே மறைகளின் சொல்லேயும் பொருளேயும் பிரமன் முதலானுர்க்கு முதன்முதலில் அறிவித்தவன்; (2) அம்மறைகளே அசுரர் அபஹரித்தபோதும், மற்றும் பல சமயங்களிலும் அவர்களேத் தொலேத்து தேவர்களுக்கு உதவியவன் அவனே; (3) தேவர்களே நல்வழிச் செலுத்துபவன் அவனே; (4) இவ்வுலகச் செல்வங்களேயும் மோக்ஷத்தையும் அளிப்பவன் அவனே; (5) தேவர்களுக்கு ரக்ஷகனுகவும், அந்தர்யாமியாகவும், அறிவளிப்பவனுகவும், தவப்பலனுகவுமிருப்பவன் அவனே. (6) எல்லாப் பொருள்களிலும் வியாபித்திருந்தும், அவற்றிலுள்ள தோஷங்களால் தொடப்படாத பரஞ்சுடர் அவனே; (7) பற்றற்றவருக்கு எல்லாவுறவுமாயிருப்பவன் அவனே; (8) எல்லேயற்ற கருணேக்கு உறைவிடமாயிருப்பவன் அவனே; (9) வேதநெறியிலே அறியத்தக்கவன் அவனே; (10) பரம

பதத்தை விட்டு அடியார்க்காக அஞ்ஞானமிக்க நிலவுலகில் பிறந்து படாதபாடுபடுபவன் அவனே; (11) கடல்துயின்ற தேவனான அவன் ஸர்வஸ்வாமியாகையாலே அவனுக்கு இயற்கையில் பகைவரும் இல்லை நண்பருமில்லை; (12) அவனுடைய உலகில் இவ்வுலகத்திலுள்ள ஒளியும் இருளுமில்லை. (13) அவனுடைய ஸ்வரூபரூடங்களுக்கு மேலும் கீழுமில்லை; (14) அவனுக்கு இளமையும் முதுமையும், முதலும் இடையும் முடிவும், முன்னும் பின்னுமில்லை; (15) மென்மைமிக்க தன் திருவடிகள் நோவ இவ்வுலகில் வந்து கைம்மாறு கருதாமல் அடியார்க்கு அளிப்பவனவன்; (16) பிரமனை உந்தித் தாமரையில் படைத்தவன் அவன்; (17) அப்பிரமனே கற்பகாலமெல்லாம் அளந்தாலும், திருமாலின் ஒரு குணத்தையும் அளவிடமுடியாது; (18) நல்லவர்களான தேவர்களுக்குத் தாமரைக்கைநோவக் கடல் கடைந்து அமுதளித்துத் தீயவரான அசுரரை வஞ்சித்தவன் அவன்; (19) அவனே உலகுக்கு நிமித்தகாரணமாகவும் உபாதான காரணமாகவுமிருப்பவன்; (20) புண்ணியம் புரிகிறவர்களைக் காப்பவன்; பாவம் செய்கிறவர்களை அழிப்பவன். (21) தேவர்களே ஒருகாலத்தில் திருமால் பரம் பொருளா அல்லவா என்று ஐயமுற்றபோது, ஸப்தரிஷிகளும் தீயைத் தொட்டுநின்று திருமாலே எல்லாவுலகையுமுடைய பரம் பொருள் என்று சத்தியம் செய்து அவர்களுடைய ஐயத்தைப் போக்கினர்.

இவ்விருபத்தொரு குறிப்புக்களில் ஒவ்வொன்றும், குறிப்பாக ஆறுவது பாடலில் ஸப்தரிஷிகள் திருமாலே பரம்பொருள் என்று அக்னி ஸாக்ஷிகமாக சத்தியம் செய்து கொடுத்து தேவர்களின் ஐயத்தைப் போக்கினர் என்று கோஷித்திருப்பதும் கம்பன் வேறொரு தெய்வத்தைப் பரம் பொருள் என்று கனவிலும் கருதாத பரமவைஷ்ணவன் என்று கையிலங்கு கனியாகவும், வெள்ளிடை மலையாகவும் விளக்குகின்றது.

'ஏழையும் இளவலும வருக' என, 'இனிதா
வாழிய' அவரொடும் வந்தனன் மகிழ்வால்
ஊழியின் முதல், முனி உறையுளை அணுக
ஆழியில் அறிதுயிலவன் என மகிழ்வான். [2711]

என்னும் பாடலில் கடலில் யோகநித்திரை செய்பவனை திருமாலே இராமன் என்று கூறி. அவனே ஊழி முதல்வன் என்றும் உணர்த்தினன். அடுத்துவரும் பாடலொன்றில் இராமனைத் 'திருமகள் தலைவ!' [2715] என்று சரபங்கர் அழைத்கதாகக் கூறி,

ஆயிரம் முகம் உள தவம் அயர்குவென் யான்
நீ இவண் வருதிசொல் எனும் நிலை உடையேன்;
போயின இரு வினை புகலுறு விதியால்
மேயினை; இனி ஒரு வினை இலை விறலோய்! [2717]

என்ற பாடலில், ராமனைக்கண்டதால் தன் இருவினைகளும் அழிந்தனவென்று கூறுவதன் மூலம் அவனே பரம்பொருள் என உணர்த்தினன்.

இந்திரன் அருளினன் இறுதிசெய் பகலா
வந்தனன், 'மருவுதி மலர் அயன் உலகம்
தந்தனன்' என, 'அது சாரலென்' உரவோய்!
அந்தம் இல் உயர் பதம் அடைதலை முயல்வேன். [2718]

என்னும் பாடலில் திருமாலின் உந்தித்தாமரையில் பிறந்த பிரமனின் உலகமும் அழிவுள்ளதென்றும், அற்பமான தென்றும் அகனாலயே சரபங்கன் அதை வெறுத்ததாகவும், அழிவற்றதும், மிகச்சிறந்ததுமான பரமபதத்தையே அடைய முயல்றதாகவும் கூறி,

'ஆதலின் இது பெற அருள்' என உரையாக்
காதலி அவளொடு கதழ் எரி முழுகிப்
போதலை மருவினன்; ஒரு நெறி புகலா
வேதமும் அறிவரு மிகு பொருள் உணர்வோன். [2719]

என்னும் பாடலில் அந்தப்பரமபதத்தை இராமனே அருள வேண்டும் என்று சரபங்கன் வேண்டியதாகக் காட்டுவதன் மூலம் திருமாலின் உலகமே அழியாத பரமபதம் என்றும். பிரமன் முதலானோரின் உலகங்கள் அத்தகையவையல்ல என்றும் காட்டினான் கம்பன். இவன் திரிமூர்த்தி சாம்ய வாதியாயிருக்கமுடியுமா?

தேவரும், முனிவரும், உறுவது தெரிவோர்
யாவரும், நறு விரை மலர் அயன் முதலோர்
ஏவரும், அறிவினில் இரு வினை ஒருவிப்
போவது கருதும் அவ் அரு நெறி புக்கான். [2720]

என்னும் பாடலில் பிரமன் முதலானோரும் தம் புண்ணிய பாப வினைகளைப்போக்கிப் பரமபதத்தை அடைய விரும்பும் ஜீவர்களே என்று காட்டுவதிலிருந்தும் கம்பன் திரிமூர்த்தி சாம்யவாதியல்லன் என விளங்குகிறது.

'அண்டமும் அகிலமும் அறிவரும் நெறியால்
உண்டவன் ஒரு பெயர் உணர்குநர் உறு பேறு
எண் தவ நெடிது' எனின், இறுதியில் அவனைக்
கண்டவர் உறு பொருள் கருதுவது எளிதோ? [2721]

என்னும் இப்படலத்தின் கடைசிப் பாடலில் உலகை யெல்லாம் ஊழிகாலத்தில் தன் வயிற்றில் அடக்கிய திருமாலின் ஒரு பெயரை உணர்ந்தவரே பேரின்பம் பெறுவரென்றால், கடைசிக்காலத்தில் அவனை நேரே கண்ட சரபங்கன் பெற்ற பேற்றை அளவிட முடியுமோ என்று கோஷிப்பதன் மூலம் திருமாலே இராமனென்றும் அவனே பரம்பொருளென்றும் ஐயம் திரிபற முடிவுகட்டினான் கம்பன்.

## அகத்தியப் படலம்

இப்படலத்தில் சிற்சில பாடல்களில் மும்மூர்த்திகளைப் பற்றிய குறிப்புகளும் வருகின்றன. "இரைத்த மறை" [2764]என்று தொடங்கும் பாடலில் "அயனும் அறியாத

பொருள் நேர் நின்றுதவுமால்'' என்று உரைப்பதிலிருந்து பிரமன் பரம்பொருளல்லனென்றும். பரம்பொருளான இராமன் அவனிலும் வேறுபட்டவனென்றும் விளங்குகிறது. '' மூசு அரவு சூடும் முதலோன்'' [2761] என்றும். ''நிழல் பொலி கணிச்சி மணி நெற்றி உமிழ் செங்கண் தழல் புரை சுடர்க்கடவுள் தந்த தமிழ்'' [2762] [ஒளி விளங்குகின்ற மழுவையும். நெற்றி உமிழ்ந்த மணிபோன்று (நெற்றியில்) விளங்கும் சிவந்த கண்ணையும் உடைய நெருப்பைப் போன்று ஒளி விளங்கும் செம்மேனியனான சிவபிரான் (அகத்தியனுக்கு) தனக்குக் கற்பித்த தமிழ்] என்றும் சிவனைப் பற்றிப் பாடியிருக்கிறான். ''முதலாவார் மூவர்'' என்று முதலாழ்வார் அருளியபடியே சிவனுக்கும் தன் தந்தையான பிரமனையும். பாட்டனான திருமாலையும் தவிர்ந்த மற்ற தேவர்களைக் குறித்து முதன்மையுண்டாகையாலே ''மூசு அரவு சூடும் முதலோன்'' என்று பாடியதில் குறையில்லை. ''துண்டமதி வைத்தவனை ஒத்த முனி'' [2772] என்றும். ''ஈசன் நிகராய்'' [2761] என்றும் அகத்தியனுக்குச் சிவனை ஒப்பிடுகையாலே. சிவனும் பரம்பொருளைக்குறித்துத் தவம் செய்பவனேயொழியப் பரம்பொருளல்லன் என விளங்குகிறது. ''உலகை நேமியின் அளந்தான்'' [2757] என்னும் பாடலில் திருமாலே பரம்பொருள் என்று உணர்த்தும் உலகளந்த விருத்தாந்தத்தைக் காட்டினான்.

'விழுமியது சொற்றனை: இவ் வில் இது இவண், மேல் நாள்
முழுமுதல்வன் வைத்துளது; மூவுலகும். யானும்.
வழிபட இருப்பது; இது தன்னை வடி வாளிக்
குழு. வழு இல் புட்டிலொடு கோடி' என. நல்கி. [2776]

என்னும் பாடலில் அகத்தியர் முழுமுதல்வனுடைய வில்லை இராமனுக்குக் கொடுத்ததாகப் பாடுகிறான் கம்பன்.

''இதூம் தி₃வ்யம் மஹச்சாபம் ஹேமரத்நவிபூ₄ஷிதம் ।
வைஷ்ணவம் புருஷவ்யாக்₄ர நிர்மிதம் விஸ்வகர்மணா ॥''
[ரா-ஆ 12-32]

[மனிதர் தலைவனே! பொன்னாலும் மணியாலும் அலங்கரிக்கப்பெற்ற இந்தப்பெரிய சிறந்த வில் விஷ்ணுவினுடையது. விச்வகர்மாவால் செய்யப்பட்டது.] என்று வால்மீகி இவ்விடத்தில் அகத்தியர் கொடுத்த வில் விஷ்ணுவினுடையது என்று தெளிவாகக் கூறியிருக்கிறார்.

"எறும் வலிப் பொருவில்தோள் அவுணரோ(டு)
அமரர் பண்(டு) இகல்செய்காலத்(து)
உறுதிறல் கலுழன் மீது ஒருவன் நின்(று)
அமர் செய்தானுடைய வில்லும்
தெறுசினத்தவர்கள் முப்புர(ம்) நெருப்புற
உருத்தெய்த அம்பும்
குறுமுனிப் பெயரினன் நிறைதவர்க்(கு)
இறைதரக் கொண்டுநின்றான்"

[யுத்தகாண்டம்-மந்திரப்படலம்-87]

என்று யுத்தகாண்டத்தில் கம்பனும் விபீஷணன் வாயிலாக கருடவாஹனனுடைய வில்லேயிது என்று காட்டியிருக்கிறான். கம்பனின் பாடல்களில் பல்லாயிரக்கணக்கானவற்றைத் தனக்குப் பிடிக்காத ஒரே காரணத்தால் இடைச்செருகல் என்று தள்ளிய (காலஞ்சென்ற) டி. கே. சிதம்பரநாதமுதலியார் என்பவர். 'கல்கி' பத்திரிகையில் கம்பராமாயண விளக்கமெழுதுகையில் ஆராய்ச்சியில்லாமல். 'முழுமுதல்வன்' என்னும் தொடருக்குச் சிவன் என்று பொருள் எழுதினர். சுமார் இருபது வருடங்களுக்கு முன் நடந்தது இது. அப்போதே நாம் இதை மறுத்து எழுதிய கடிதம் கல்கியிலும் பிரசுரிக்கப்பட்டது. டி. கே. சியால் யாதொரு பதிலும் எழுதமுடியவில்லை. ஆகையால். இப்பாடலிலிருந்தும் "முதலாவார் மூவர் அம்மூவருள்ளும் முதலாவான் மூரிநீர்வண்ணன்" என்னும் ஆழ்வார்களின் கொள்கையைத் தழுவியவனே கம்பன் என்று தெளிவாக விளங்குகிறது.

இப்புவனம் முற்றும் ஒரு தட்டின் இடை இட்டால்
ஒப்பு வரவிற்று என உரைப்பு அரிய வாளும்.
வெப்பு உருவு பெற்ற அரன் மேரு வரை வில்லா
முப்புரம் எரித்த தனி மொய்க்கணையும். நல்கா. [2777]

என்னும் பாடலில் சிவன் திரிபுரம் எரித்த விருத்தாந் தத்தை எடுக்கும்போது, விஷ்ணுதேஜஸ்ஸால் விளங்கப் பெற்ற அம்பே அப்புரமெரித்த காரியத்தைச் செய்தது என்பதைக்காட்ட 'முப்புரம் எரித்த தனி மொய்க்கணை' என்று கூறியதும் குறிக்கொள்ளத்தக்கது.

சூர்ப்பணகைப் படலம்

'சிந்தையின் உறைபவற்கு உருவம் தீர்ந்ததால்;
இந்திரற்கு ஆயிரம் நயனம்; ஈசற்கு
முந்திய மலர்க்கண் ஓர் மூன்று; நான்கு தோள்
உந்தியின் உலகு அளித்தாற்கு' என்று உன்னுவாள். [2840]

என்னும் பாடலில் "உந்தியின் உலகு அளித்தான்" என்று சூர்ப்பணகை வார்த்தையாகத் திருமாலைப்பாடுவதிலிருந்து, பிரமன் முதலான எல்லாவுலகையும் உந்தித்தாமரையில் படைத்தவன் திருமாலே என்பது சூர்ப்பணகை போன்ற அரக்கிகட்கும் நன்கு தெரிந்த விஷயம் என்று காட்டுகிறான் கம்பன்.

'கற்றை அம் சடையவன் கண்ணில் காய்தலால்
இற்றவன். அன்றுதொட்டு இன்றுகாறும் தான்
நல் தவம் இயற்றி. அவ் அநங்கன். நல் உருப்
பெற்றனனும்' எனப் பெயர்த்தும் எண்ணுவாள். [2841]

என்னும் பாடலில் சிவன் காமனையெரித்த விருத்தாந் தத்தையும். "முப்புரங்கள் செற்ற சேவலோன்" [2867] என்று புரமெரித்த விருத்தாந்தத்தையும் பாடும்போது பரமாத்மாவுக்கேயுரிய அடைமொழிகள் ஒன்றையும் இட வில்லை. "விண்ணிடை இம்பர் நாகர் விரிஞ்சனே முதலோர்க்கு

எல்லாம் கண்ணிடை ஒளி'' [2885] என்னும் பாடற்பகுதியில் மும்மூர்த்திகளில் ஒருவனான பிரமனுக்கும் கண்ணில் ஒளியாயிருப்பவன் இராமனே என்று காட்டுகிறான். ''மெய்ஞ் ஞானக் கண்ணருள் செய் கண்ணன்'' [2863] ''வேத முதல்'' [2866] ''அராவணை அமலன் அன்னாய்'' [2880] ''வேதத்தின் அறிவை வென்றான்'' [2881] ''உரைகடந்தான்'' [2951] என்னும் பாடற்பகுதிகளில் அராவணையமலனான திருமாலே அவன் என உணர்த்தி. அவனுக்குப் பரம்பொருளுக்கேயுரிய பலபெருமைகளைப் பாடுகிறான்.

'மரு ஒன்று கூந்தலாளை
வனத்து இவன் கொண்டு வாரான்;
உரு இங்கு இது உடையர் ஆக
மற்றையோர் யாரும் இல்லை;
அரவிந்த மலருள் நீங்கி.
அடி இணை படியில் தோயத்
திரு இங்கு வருவாள் கொல்லோ?'
என்று அகம் திகைத்து நின்றாள். [2887]

என்னும் பாடலிலும். ''ஆயிடை அமுதின் வந்த'' [2893]

''காவியோ, கயலோ. எனும் கண் இணைத்
தேவியோ திருமங்கையின் செவ்வியாள்.'' [2915]

என்னும் பாடற்பகுதிகளிலும் சீதை திருமகளே என்று உணர்த்துகிறான். பார்வதியென்றோ. சரசுவதியென்றோ சீதையை எங்குமே குறிப்பிடுவதில்லை. இவற்றிலிருந்து சீதாராமர்கள் லக்ஷ்மீநாராயணர்களின் அவதாரமாயிருப்பவர்களே என்னும் வால்மீகியின் கருத்தையே முற்றும் தழுவியவன் கம்பன் என்று விளங்குகிறது. இப்படியிருக்க.

சிவனும். மலர்த் திசைமுகனும்.
திருமாலும், தெறு குலிசத்து
அவனும். அடுத்து ஒன்றாகி
நின்றன்ன உருவோனே! [2960]

என்னும் பாடலில் சடைமுடி தரித்திருத்தலால் சிவனையும், பிரமனையும், தலைமைத்தன்மையால் இந்திரனையும், வடிவழகு முதலான எல்லாப்பெருமைகளாலும் திருமாலையும் ஒத்திருப்பதாகப் பாடியிருக்குமிடத்தில் குறிப்புரையில்,

'' 'வாசவன் மாயன் மற்றை மலருளோன் மழுவாள் அங்கை
ஈசன் என்(று) இனையதன்மை இளிவரும் இவரால் அன்று
நாசம் வந்துற்றபோது நல்லதோர் பகையைப் பெற்றேன்'
[கும்பகருணன் வதைப்-31]

என இராமன் ஆற்றலைக் கண்ட இராவணன் இந்நாற் பெரும் தெய்வத்திற்கும் இராமன் மேம்பட்டவன் என்று கூறுவதைப் பின்னர்க்காணலாம்'' என்று குறிப்பெழுதியிருப்பது கம்பன் கருத்தைக் காட்டியதாகாது. இராமன் திருமாலே என்பதை அறியாத இராவணன், ''வாசவன்'' என்று தொடங்கும் பாடலில் மனிதனான இராமனை தேவர்களான மும்மூர்த்திகளிலும் சிறப்புற்றவன் என்று கூறுவதால் இராமன் திருமாலின் அவதாரமே என்னும் கம்பன் கொள்கை மாறிவிடாது. கம்பனுடைய கடவுட்கொள்கையை உறுதியாக நிலைநாட்ட வல்லவை அவன் கவிக்கூற்றாகப் பாடியிருக்கும் பாடல்களே என்பது குறிக்கொள்ளத்தக்கது.

கரன் வதைப் படலம்.

துமிலப் போர் வல் அரக்கர்க்குச் சுட்டினள்,
அமலத் தொல் பெயர் ஆயிரத்து ஆழியான்
நிமலப் பாதம் நினைவின் இருந்த அக்
கமலக் கண்ணனைக் கையினில் காட்டினள். [2986]

என்னும் பாடலில் அமலனாதிபிரானை நினைவூட்டிக்கொண்டு, இராமன் தன் குலதெய்வமான அரங்கநகரப்பனை வனத்திலும் தியானித்துக் கொண்டிருப்பதாகக் கூறுகிறான் கம்பன். இங்கு திருமாலைக் குறிப்பிடும்போது ''அமலத் தொல் பெயர் ஆயிரத்து ஆழியான்'' என்று பேராயிரங்கொண்டதோர் பீடுடையனைக் குறிப்பிடுவதுபோல் சிவன் முதலான தேவர்களைக் குறிப்பிடுவதில்லை. இதிலிருந்தும் திருமாலே பரம்பொருள் என்னும் கருத்துடையவன் கம்பன்

என்று விளங்குகிறது. இதே படலத்தில் "நாகத்தனி யொரு வில்லியை நளிர் முப்புரர் மேனாள்" [3068] என்று சிவன் புரமெரித்த விருத்தாந்தத்தைக் குறிப்பிடுகிறான். 'கறுத்த மணி கண்டர்" [3142] என்று நீலகண்டனென்றும் சிவனைப் பாடுகிறான். பரம்பொருளின் பெருமையொன்றை யும் காட்டவில்லை. நேர்மாறாக.

'அங்கு அரக்கர் அவிந்து ஒழிந்தார்' எனப்
பொங்கு அரத்தம் விழி வழி போந்து உக
வெம் கரப் பெயரோன் வெகுண்டான்; விடைச்
சங்கரற்கும் தடுப்பருந் தன்மையான். [2993]

என்னும் பாடலில் விடையேறும் சங்கரனாலும் கரனைத் தடுக்கமுடியாதென்றும்,

கண்டு நின்று, கருத்து உணர்ந்தான் என,
அண்டர் நாதன் தடக் கையின், அத்துணை,
பண்டு போர் மழுவாளியைப் பண்பினால்
கொண்ட வில்லை வருணன் கொடுத்தனன். [3149]

என்னும். பாடலில் சிவனைத் திருமால் ஜயித்த விருத்தாந் தத்தையும் பாடுவதிலிருந்து சிவன் பரம்பொருளல்லன் என்னும் முடிவை உறுதிப்படுத்துகிறான் கம்பன். 3149-உரையில். "பண்டு போர்" என்று தொடங்கும் இரண்டு அடிகளுக்கு. "முன்னொரு நாள் போரில் மழுப்படையை ஆள்பவனான பரசுராமனை வீரப்பாட்டினால் இராமன் வென்று கொண்ட வில்லை வருணன் கொடுத்தான்" என்று பொழிப்புரை எழுதப்பட்டுள்ளது. "மழுவாளிக் கன்றளித்த" முதலான விடங்களில் சிவனை மழுவாளி யென்று குறித்திருக்கிறானாகையால். இங்கு திருமால் சிவனை வென்ற விருத்தாந்தத்தையும் கம்பன் காட்டுகிறான் என்று கொள்வதே பொருத்தமுடையது. இப்படிப்பட்ட திருமாலே இராமன் என்றும் இங்கு உணர்த்தப்படுகிறது. "எழுலகினுக் கும் ஒரு நாயகன்" [3144] என்னும் பாடற்பகுதியில் இவனே முழுமுதல்வன் என்றும் காட்டப்படுகிறது.

முதல் பாகம் முற்றிற்று.

# ஸ்ரீஸூக்திமாலா வெளியீடுகள்

பதவுரை, அரும்பதவுரை, ப்ரமாணத்திரட்டு முதலானவற்றோடு கூடிய பெரியவாச்சான்பிள்ளை முதலான பூர்வாசார்யர்களின் க்ரந்தங்கள்.

| க்ரந்தங்கள் | விலை | தபால் |
|---|---|---|
| 1. பரந்த ரஹஸ்யம் முதலிய எட்டு ரஹஸ்யங்கள் | 1·50 | ·25 |
| 2. ஸ்தோத்ரரத்ந சதுஃச்லோகீ ஜிதந்தே வ்யாக்யானங்கள் | 3·00 | ·45 |
| 3. திருப்பல்லாண்டு வ்யாக்யானம் | 1·50 | ·25 |
| 4. முதல் திருவந்தாதி வ்யாக்யானம் | 1·88 | ·30 |
| 5. பெருமாள்திருமொழி வ்யாக்யானம் | 1·88 | ·30 |
| 6. திருமாலை வ்யாக்யானம் | 2·75 | ·40 |
| 7. திருவாசிரியம் பெரியதிருவந்தாதி வ்யாக்யானம் | 1·63 | ·30 |
| 8. சதுஃச்லோகீ வ்யாக்யானம் (நாயனாராச்சான்பிள்ளை) | 1·50 | ·25 |
| 9. கத்ய வ்யாக்யானங்கள் | 2·00 | ·37 |
| 10. நாச்சியார்திருமொழி வ்யாக்யானம் | 4·00 | ·60 |
| 11. திருச்சந்தவிருத்த வ்யாக்யானம் | 3·00 | ·45 |
| 12. நான்முகன்திருவந்தாதி வ்யாக்யானம் (விவரணத்துடன்) | 2·50 | ·40 |
| 13. ஸ்ரீராமாயண தனிச்லோகம்(விவரணத்துடன்) I Part. | 3·50 | ·55 |
| ஷை இரண்டாம்பாகம் (விவரணத்துடன்) | 7·00 | 1·00 |
| 14. திருப்பள்ளியெழுச்சி வ்யாக்யானம் | 0·50 | ·10 |
| 15. பாசுரப்படி ராமாயணம் (விலையில்லை தபால்கூலி 0·10) | | |
| 16. அமலனாதிபிரான் வ்யாக்யானங்கள் | 1·88 | ·30 |
| 17. கண்ணிநுண்சிறுத்தாம்பு வ்யாக்யானம் | 2·75 | ·40 |
| 18. சிறியதிருமடல் வ்யாக்யானம் (விவரணத்துடன்) | 1·38 | ·25 |
| 19. முமுக்ஷுப்படி வ்யாக்யானம் | 2·50 | ·37 |
| 20. பெரியதிருமடல் வ்யாக்யானம் (விவரணத்துடன்) | 1·50 | ·25 |
| 21. முதல் திருவந்தாதி,அப்பிள்ளையுரை,விவரணத்துடன் | 3·00 | ·45 |

## ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. திருப்பாவை வ்யாக்யானம் | 3·00 | ·45 |
| 2. (போதாயந) ஸந்த்யாவந்தநம் பதவுரையுடன் | 0·31 | ·10 |
| 3. (போதாயந) உபாகர்மவிதி | 0·31 | ·10 |
| 4. புருஷஸூக்த வ்யாக்யானம் | 0·75 | ·15 |
| 5. நாராயணஸூக்த வ்யாக்யானம் | 0·75 | ·13 |
| 6. ஸ்ரீஸூக்த வ்யாக்யானம் | 1·50 | ·38 |
| 7. பூ நீளா விஷ்ணுஸூக்த வ்யாக்யானங்கள் | 1·75 | ·38 |
| 8. தேஹளீச ஸுப்ரபாதம் | 0·25 | ·15 |
| 9. கம்பராமாயணம் (கையடைப்படலம் முடிய) | 2·50 | ·41 |
| 10. ராமாநுஜதேசிக ஸ்தோத்ரங்கள் | 1·00 | ·18 |
| 11. பாகவத தசமஸ்கந்த கீர்த்தனை பூர்வபாகம் | 4·00 | 1·00 |
| ஷை உத்தரபாகம் | 4·00 | 1·00 |
| 12. ஸ்ரீகேசவ மணிமாலை | 0·50 | ·10 |
| 13. ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹஸ்தவம் | 0·37 | ·10 |
| 14. யதிராஜவிம்சதி வ்யாக்யானம் | 0·88 | ·15 |
| 15. ஸத்மதகாரிகாவளி | 1·75 | ·38 |
| 16. விஷ்ணுசித்தவிஜயம் முதல் பாகம் | 5·00 | ·75 |
| ஷை இரண்டாம்பாகம் (அச்சில்) | 7·00 | 1·00 |

கிடைக்குமிடம்:- S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்,
3. புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.